# "செந்தமிழ்ச் செல்வி"

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.எச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

உ. முனைவர் தமிழண்ணல், பேராசிரியர்,
மதுரை, காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

௩. பேராசிரியர் ச. அகத்தியலிங்கம், மொழித்துறைத் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

௪. முனைவர் பொன். சௌரிராசன். தமிழ்த்துறைத் தலைவர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

௫. முனைவர் பொன். கோதண்டராமன், உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.

௬. முனைவர் கு. பரமசிவன் எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

௭. பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி, எம்.ஏ
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

௮. முனைவர் சொ. சிங்காரவேலன். எம்.ஏ., டிப்.லிங்., பிஎச்.டி.
மயிலாடுதுறை

௯. கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்,
திருநகர், மதுரை-6

௧0. முனைவர் வீ. ப. கா சுந்தரம், தமிழியல்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

நிறுவனர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.

ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.


# உள்ளுறை

பக்கம்

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு-ருசு தி. வ. ஆண்டு உ0கரு. மார்கழி பரல்-ரு
சனவரி 1985

# ஓதுவார்களைப் போற்றுமின் !

முத்தமிழுள் ஒன்றான இசைத் தமிழ் மூவாயிரம் ஆண்டுகட்கு மேலாகச் சிறந்து விளங்கி வருகிறது. பழந்தமிழர் வாழ்விற்கு இலக்கணங் கூறிய அகத்தியமும், தொல்காப்பியமும் தமிழ்நாட்டில் நிலவிவந்த ஐவகை நிலப் பாகுபாட்டையும் அவ்வவற்றிற்குரிய இசையையும் குறிப்பிடுகின்றன. எனவே அக்காலத்திலேயே தமிழர்கட்கு ஒழுங்கு முறைக்குட்பட்ட இசையமைப்பு இருந்தமை புலனாகின்றது.

காலப்போக்கில் அது வளர்ந்து வந்ததைச் சங்க இலக்கியத்தை ஒட்டியெழுந்த சிலப்பதிகாரம் உணர்த்தும். இருப்பினும் பண்கள் பெருகி இசையின்பம் மக்கள் காதில் பாய்ந்தது தேவார காலமாகிய ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்னரேயாம். 108 பண்களை வகுத்து அவற்றில் பாடல்களை இனிமையாகப் பாடி மகிழ்ந்து வந்த தமிழ் மக்களின் இசை, வேற்றரசர் தாக்குதலாலும் வேற்று மொழிகளின் வல்லாண்மையாலும் ஒளி இழந்துவிட்டது. அவற்றில் 24 பண்கள் மட்டுமே எஞ்சியிருக்கின்றன. முக்கால் பங்கை இழந்த நிலையில் இன்று நாமுள்ளோம். நாயக்கர்களின் ஆட்சிக்குப் பின் தமிழ்நாடு தமிழிசையை—பண்களை—திருமுறை ஓதுவார்களிடம் அடைக்கல மாக ஒப்புவித்துவிட்டுத் தெலுங்கு இசைக்கு முதன்மை கொடுக்கத் தலைப்பட்டது.

உண்ணாமுலையம்மை அபீதகுஜாம்பாள் ஆனாள். தூக்கிய திருவடி குஞ்சிதபாதமாயிற்று. அண்ணாமலை அருணாசலமானது. மறைக்காடு வேதாரண்யமானது.

இவ்வாறே தமிழிசைப் பண்கள் புதுப்புதுப் பெயர்கள் பெற்றன. ஒரு சில பழைய பண்கள் புதிய இராகங்களின் பெயர்களைப்

பெற்றன. சில புதிய கர்நாடக இராகங்கள் பழந்தமிழிசையின் அடிப்படையில் தோன்றிப் புதுப் புதுப் பெயர்களைப் பெற்றன. வழக்கம்போல் தமிழன் பழமையை மறந்தான். தமிழர் பழந் தமிழிசையைத் 'தியாகம்' செய்த தியாகேசர்களாயினர். தமிழிசை போற்றுவாரின்றி ஒடுக்கப்பட்டது. பிறப்பால் தமிழர்கள் இசையால் தெலுங்கர்களாயினர்.

இந் நிலையில் பண்களை முறையாகப் பின்பற்றிவந்த திருமுறை இசைவாணர்களான ஓதுவார்கள் ஒதுக்கப்பட்டனர். தமிழகத் திருக் கோயில்களில் திருமுறை ஓதும் பழக்கம் இல்லையாயின் இன்று ஓதுவார்களும் இருக்க மாட்டார்கள். திருமுறையும் தமிழர் வாழ்விலிருந்து இடம் பெயர்ந்திருக்கும்.

இன்று திருக்கோயில்களிலும் ஆங்காங்கு நடைபெறும் குட முழுக்கு விழாக்களிலும் 'முக்காலே முண்டாணி'ப் பங்கு வறட்டு ஓசைக்கு ஒதுக்கப் பெற்றபின் இனிய, மக்களுக்குப் புரிந்த, உள்ளத்தை உருக்கக் கூடிய திருமுறை இசைக்கு ஒரு சிறு பங்கே அளிக்கபபெறுகிறது. அவ் விசையைக் கூட அங்குள்ள 'வறட் டோசை வேதவாணர்கள்' ஏதோ காதில் நஞ்சு புகுவதுபோல் பொறுத்துக்கொண்டிருப்பார்கள். உடனிருக்கும் இனத்தால் வேற்றாரயும் பிறப்பால் தமிழர்களுமாகியோர், ஏதோ யாக குண்டத்திலேயே நிற்பதுபோல் துடித்துக்கொண்டிருப்பார்கள். தமிழ்நாட்டில் தமிழர்கள் பொருட்செலவில் நடைபெறும் குட முழுக்கு விழாக்களில் தமிழிசைக்கு இத் தீண்டாமை நிலை ஏன்? திருமுறை ஓதுவாரையும் 'வறட்டோசை வல்லாளர்' தீண்டத்தகா தோரைப் போலவே யாக கூடத்தில் ஓர் ஓரத்தில், முடிந்தால் அதற்கு வெளியிலும் நிற்க வைத்து 'திராவிட வேதத்'தை ஓதச் செய்வது ஏன்? இந் நிலையை மாற்றக்கூடிய ஓர் அம்பேத்கார் தோன்றும் நாள் எந்நாளோ?

இத்தகைய இன்னல்களுக்கிடையே தேவாரப் பண்களைக் காப்பாற்றியே தீருவோம் என்று குறைந்த ஊதியத்தால் ஒட்டிய வயிறும் குழி விழுந்த கண்களுமாய்ப் பெரும்பாலான ஓதுவார்கள் பழந்தமிழிசையை எந்தச் சமயம் இறைவன் காலடியில் வைத்துவிட்டு ஓடிவந்து விடலாம் என்ற எண்ணத்துடனேயே இறைவன் திரு முன்னிலையிலேயே துடித்துக்கொண்டிருப்பதைப் பார்க்கும்போது 'மெல்லத் தமிழினிச் சாகும்' என்று யாரோ ஒருவர் கூற வெகுண் டெழுந்த பாரதியார் இன்றிருந்தால் 'மெல்லத் தமிழிசை சாகும்' என்னும் படியான இந்த அவல நிலையைக் கண்டால் எப்படித் துடிப் பாரோ? ஏனெனில் அவர் பிறப்பால் மட்டும் தமிழனல்ல. இனத் தாலும் தம்மைத 'தமிழ்ச் சாதி' என்று கூறியவரன்றோ?

நம்மவர்களிலே ஒரு சில குடும்பங்களை முன்னாளில் ஆகம முறைப்படி ஆலய வழிபாடு செய்தற்கென ஒதுக்கி வைத்தோம். அவர்களே சிவாச்சாரியார்கள் எனப்பட்டனர். அவர்களுக்கு மட்டுமே கருவறைக்குள் செல்லவும் முப்போதும் திருமேனி தீண்டவும் உரிமையுண்டு.

ஐம்பது ஆண்டுகட்கு முன்னர் உலககுரு திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலுக்குள் சென்று இறைவன் திருமேனியைத் தொட்டு வழிபாடு செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. இதனையறிந்த உண்மைச் சைவர்களாகிய நெல்லைவாழ் மக்கள் போராட்டம் நடத்தி அதனைத் தடுத்துவிட்டனர். குல தெய்வமான அம்மன் கோயிலில் இன்றும் அவர்களே திருமேனி தொட்டு வழிபட்டு வருகிறார்கள் எனின் இது பொதுவாக நாடெங்கணுமுள்ள அம்மன் கோயில்களில் ஆங்காங்கு வாழும் பகுதி மக்களே வழிபாடு செய்வதற் கொப்பாகும். அதில் தடையேதுமில்லை. ஆகம முறைப்படி இயங்கும் பாடல்பெற்ற திருக்கோயில்கள் அனைத்திலும் சிவாச்சாரியார்கள் மட்டுமே வழிபாடாற்ற இயலும்.

எனவே நம்மவரான சிவாச்சாரியார்களே நம் திருமுறைகளுக்குச் சிறப்பளிக்காது அவற்றைத் திராவிட வேதம் என்று புறக்கணித்து ஒடுக்கி வருகின்றனர். தாம் ஏதோ திராவிடர் அல்லாதார் என்று அவர்கள் எண்ணுகின்றனர் போலும்!

சிவாச்சாரியார்களை ஒதுக்கியதுபோலத் திருமுறைகளை ஓதுவதற்கென்றே ஓதுவார்களை ஒதுக்கி வைத்தோம். தாய்மொழியையே படித்த அவர்கள் இன்று தீண்டத்தகாதவர்கள் போலாகி, வாழ்க்கை நிலையிலும் மிகவும் பின்தங்கியுள்ளனர். போற்றுவாரின்மையால் இன்று ஓதுவார்கள் இனம் ஒடுங்கிக் கிடக்கிறது. சிவாச்சாரியார்கள் இல்லாத கோயில்கள் பெரும்பாலும் கிடையாது. ஆனால் பொருள் வருவாய் மிக்குடைய திருக்கோயில்களில் கூட ஓதுவார்கள் அமர்த்தப்படுவதில்லை. போதிய வருவாய் கிடைக்காததால் ஓதும் தொழிலுக்கு அவர்கள் வருவதில்லை. அவர்கட்குத் திங்கள் தோறும் கொடுக்கப்படும் ஊதியமும் மிகக் குறைவு. அவர்களுக்கு அதைத் தவிர வருவாய்க்கு வேறு வழி கிடையாது. வேறு தொழில்களில் ஈடுபடவும் அவர்களால் இயலாது.

சிவாச்சாரியார்கள் பதின்மர் ஒரு குடமுழுக்கு விழாவில் கலந்து கொண்டால் அவர்களுக்குப் பத்து பங்கு தொகை கிடைக்கிறதென்றால் அதே போல் ஓதுவார் பதின்மருக்கு அரைப் பங்குத் தொகை மட்டுமே கிடைக்கிறது. திருக்கோயில்களில் கேட்கவே வேண்டாம். அர்ச்சனைச் சீட்டுகளில் சிவாச்சாரியார்களுக்குப்

பங்குண்டு. அதே சமயம் திருவிளக்குத் (தீபாராதனை) தட்டிலும் பொருள் வருவாய்க்கு வழியுண்டு. ஆனால் ஓதுவார்களுக்கு மாத ஊதியத்தைத் தவிர வேறு ஒரு வருவாய்க்கு வழியில்லை.

இந்நிலை மாற வேண்டுமாயின் திருக்கோயில்களில் சில முறைகளை மாற்றம் செய்தல் வேண்டும். அர்ச்சனைச் சீட்டுகளின் விலையைச் சற்றுக் கூட்டி, அதில் கிடைக்கும் தொகையில் அவர் களுக்கும் பங்கு கிடைக்க வழி செய்யவேண்டும். காட்டாக ஐம்பது காசுகள் வாங்குமிடங்களில் அறுபது காசுகள் வாங்கிப் பத்துக் காசை ஓதுவார்க்கு அளிக்கலாம். மூலக் கருவறைகளிலுள்ள தெய்வங் களல்லாத பிற சுற்றுத் தெய்வங்களுக்கு ஓதுவார்களைக் கொண்டே அர்ச்சனை செய்யச் சொல்லலாம். இத்தகைய திட்டங்களை அரசு செய்ய முடியாது. அரசு செய்தால் மக்கள் எதிர்ப்பர். மக்களே இம் முடிவைச் செய்து அரசுக்குப் பரிந்துரைக்க வேண்டும். நம்மவர் களில் மூத்தவர்கள் பெறும் வசதிகளை அவர்களுக்கு அடுத்தவர் களும் பெற நாம்தானே வழிவகுக்க வேண்டும்? நாமெல்லாரும் ஒரு தாய் வயிற்று மக்கள் என்பதை அனைவரும் உணர வேண்டும். நமக்குள் ஒற்றுமை வேண்டும். மூத்த தமையனும் வாழட்டும். அதே வசதியுடன் இளைய தமையனும் வாழ வேண்டுமென்று விரும்புவதில் தவறேதுமில்லையே.

ஓதுவார்களும் கால சந்திகளில் பாடுவது மட்டுமே தம் தொழில் என்று எண்ணிககொண்டு பிற நேரங்களில் வெளியே செல்லக் கூடாது. காலையிலும் மாலையிலும் திருமுறைப் பண்களை முழங்கிக் கொண்டேயிருத்தல் வேண்டும்.

'அழுதால் உன்னைப் பெறலாமே' என்ற வாக்கிற்கொப்ப இறைவனை எண்ணிக் கசிந்துருகத் துணையாயிருப்பது இசை. தானும் கசிந்து பிறரையும் கசிய வைப்பவை திருமுறைப் பண்கள்.

இத் திருமுறைப் பண்களைப்பற்றி ஆய்வதற்கு நாளும் நல்ல தமிழிசை வளர்க்கும் தமிழிசைச் சங்கம் ஆண்டு தோறும் பண்ணு ராய்ச்சி மாநாடுகளை நடத்தி வருகிறது. செட்டி நாட்டரசர் வள்ளல் அரசர் அண்ணாமலைச் செட்டியாரின் முயற்சியால் தோற்றுவிக்கப் பெற்ற இச் சங்கம் செட்டி நாட்டரசர் முத்தையா செட்டியார் அவர் களால் போற்றி வளர்க்கப்பெற்றது. சென்ற ஆண்டு அவர் மறைந்தபின் அவர்தம் இளவல் திரு. மு. அ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தொடர்ந்து அதனைச் சிறப்பாக நடத்தி வருகின்றார். தமிழிசைக்குச் செட்டி நாட்டரசர் குடும்பம் செய்துவரும் அரும் பெருந் தொண்டு வரலாற்றில் பொன்னெழுத்துகளால் பொறிக்கப் பட வேண்டியதாகும்.

இவ்வாண்டு நடைபெற்ற முப்பத்தைந்தாவது பண்ணாராய்ச்சி கூட்டத்தைத் தொடங்கி வைத்துத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் தலைவர் கயிலை மாமுனிவர் தவ அருட்டிரு காசிவாசி முத்துக் குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் ஆற்றிய அருளுரையில் திருமுறை களின் சிறப்பையும் அவற்றின் பண்ணமைப்புபற்றியும் விரிவாக எடுத்துக் கூறினர். (அருளுரை தனியாக இவ்விதழில் சேர்க்கப் பெற்றுள்ளது).

அருளுரையாற்றிய தவத்திரு அடிகளார் ஆண்டுதோறும் இசைக் கலைஞர் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவருக்கு 'இசைப் பேரறிஞர்' என்ற விருதை வழங்குவதுபோல திருமுறை ஓதுவார் களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து விருதும் பாராட்டும் பரிசும் வழங்க வேண்டுமென்று அருளாணையிட்டார்கள்.

முத்தமிழில் இயல் தமிழுக்காக ஆண்டுதோறும் ரூ. இரு பதினாயிரம் பரிசு வழங்கிவரும் உயர்திரு மு. அ. சிதம்பரம் செட்டியார் அவர்கட்கு இஃது ஒன்றும் இயலாத செயலன்று. வருகிற ஆண்டிலிருந்தே திருமுறை ஓதுவார்களைச் சிறப்பிக்கும் பணியைத் தொடங்க வேண்டுமென்று 'செல்வி' விரும்புகிறாள். ஏனெனில் ஓதுவார்கள் போற்றப்பெற வேண்டியவர்கள்.

இக் கால்வழியினரை உருவாக்குவதிலும் போற்றிக் காப்பதி லும் தருமையாதீனம் பெரும் பங்கு ஏற்றுள்ளது. தேவாரப் பாட சாலை ஒன்றைச் சிறப்பாக நடத்தி வருகின்றது. அதில் பயின்ற இளைஞர் சிலர் சென்னையிலும் தமிழ்நாட்டின் பல இடங்களிலும் வெளி நாடுகளிலும் மிகச் சிறந்த முறையில் தொண்டாற்றி வரு கின்றனர். அவர்கள் மேலும் ஊக்கம் பெற இத்தகைய பாராட்டுகள் தேவை.

இவர்களைப் பாராட்டி இனிய தமிழிசையை வளர்ப்போம்.

———

# தவ அருட்டிரு காசிமடத்துத் தலைவரின்

## 35ஆம் பண்ணாராய்ச்சித் தொடக்கவுரை

22—12—84இல் சென்னை அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்ற சென்னை, தமிழிசைச் சங்கத்தின் முப்பத்தைந்தாவது பண்ணாராய்ச்சிக் கூட்டத்தைத் தொடங்கிவைத்துத் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர், கயிலை மாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள் வழங்கிய அருளுரைச் சுருக்கம் :

''கண்ணுதற் பெருங்கடவுள், கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்தாயப்பட்ட'' சிறப்புடையது, நம் செந்தமிழ் மொழியாகும்.

அஃது இயல், இசை, நாடகம், என்ற மூன்று பிரிவுகளோடு முத்தமிழ் என்று போற்றப்பெற்று வரும் தகவுடையது. இத்தகையதோர் அடைமொழியை, உலகில் வேறு எந்த மொழியும் பெறவில்லை எனலாம். இம் மூன்று பிரிவுகளில், இயல்—மனிதனின் எண்ணங்களையும், இசை—அவ்வெண்ணங்களை அவன் பிறர் மனங்கொள இனிது எடுத்துரைக்கும் சொல்லையும், நாடகம்—அவனது உள்ளத்து உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் செயலையும் குறிப்பன எனக் கூறுவர் பெரியோர். மனிதனின் முக்கரணங்களையும் இணைக்கும் இம் முத்தமிழ்ப் பாகுபாடுகள், நம் தமிழ்மொழிக்கமைந்த தனிச் சிறப்புடைய பிரிவுகள் எனலாம்.

'சங்கத் தமிழ் மூன்று' என்று சான்றோர் போற்றி வந்த இப் பாகுபாடுகளைக் காணும்போது இயற்றமிழ்போல இசை நாடகங்களும் ஒரே அவையில் பல புலவர்களாலும் ஆராயப்பெற்று வளர்க்கப்பட்டன எனக் கருதலாம். பண்டைக்காலத்தில் இயற்றமிழ் வளர்ந்தது போலவே இசை, நாடகத்தமிழ் நூல்களும் வளர்ச்சியுற்றிருந்தன என்பதற்கு ஆதாரங்கள் பல உள்ளன.

இசைக் கலன்களைத் தோளில் தூக்கிச் சுமந்துகொண்டு, கூத்தர், பாணர், விறலியர், பொருநர் ஆகியோர், கூட்டம் கூட்டமாய் நாடுமுழுவதும் சுற்றித்திரிந்து இசைத் தமிழை வளர்த்தனர்.

இசைக்கு மயங்காத உயிர் எதுவுமில்லை என்பதை உணர்ந்த தமிழ்மக்கள், அக் கலையைப் போற்றி வளர்த்த அருமைப்பாட்டைச் சங்க நூல்கள் பலவும் நமக்குக் காட்டுகின்றன. அழுகின்ற குழந்

தையைத் தூளியில் இட்டுத் தாய் தாலாட்டுப் பாடுகிறாள்; குழந்தை, அழுகையை மறந்து அயர்ந்து உறங்குகிறது; மகுடி இசை கேட்டுக் கொடிய நாகங்களும் அடங்கி ஒடுங்குகின்றன; மதம் பிடித்த யானைகளும் யாழிசைக்கு மயங்கிக் கட்டுப்படுகின்றன என்பன போன்ற உண்மைகள், பலராலும் நன்கறியப்பட்டவை எனலாம்.

**பொழுதுக்கேற்ற பண் :**

இசைத் தமிழின் பல்வேறு இயல்புகளைச் சங்க நூல்களின் குறிப்புகளைக் கொண்டும், சிலப்பதிகாரம், அதற்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரை ஆகியவற்றிலிருந்தும் நாம் நன்கு அறியலாம்.

பண்டைக்காலத் தமிழர் காலை, பகல், மாலை, இரவு என்ற பொழுதுகளுக்கு ஏற்றவாறு பண்களைப் பாடுதற்கு வரையறைகள் செய்துவைத்திருந்தனர், என்ற குறிப்பு, சங்க நூல்களில் காணப் படுகிறது.

**இருண்டகாலமும் இசைத் தமிழும் :**

இவ்வாறு பண்டைத் தமிழ் மன்னர்களாலும் புலவர்களாலும் மக்களாலும் போற்றி வளர்க்கப்பெற்றுவந்த இசைத்தமிழ், இடைக் காலத்தில் வளர்ச்சி குன்றித் தளர்ச்சியடைந்தது. கி. பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி. பி. ஆறாம் நூற்றாண்டு வரை, இசைத்தமிழுக்கு ஓர் இருண்ட காலம் தோன்றியது எனலாம்.

**சைவமும் தமிழ் இசையும் :**

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தர், திருநாவுக் கரசர் ஆகியோர் அவதரித்தனர். இறைவன், அவர்கள் வாயிலாக, இசைத்தமிழ் வளர்ச்சியைத் தமிழுலகிற்கு மீண்டும் வழங்கி யருளினான்.

'தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்' எனக் கூறியருளிய அப்பரும், ''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பி'' யருளிய ஞான சம்பந்தரும் ஆற்றிய அரும்பணியால் இசைத்தமிழ், மீண்டும் மறு மலர்ச்சி பெற்றது.

திருநீலகண்ட யாழ்ப்பாணர், ஞானசம்பந்தரோடு உடன் சென்று யாழ்மீட்டி, அவர் அருளிய தேவாரத் திருப்பதிக

இசைக்குத் துணை நின்றார். அப்பரும் அவ்வாறே பல தலங்களுக்கும் சென்று திருப்பதிகங்கள் பாடிப் பக்தி இசையை வளர்த்தருளினார். ஞானசம்பந்தர் அப்பர் காட்டிய வழியில் சுந்தரர், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் இசைத்தமிழ்த் திருப்பதிகங்களைப் பாடி அப் பணியைச் செய்தருளினார்.

பழந்தமிழிசைக்கு இன்று எடுத்துக்காட்டாய் விளங்குவன, அவர்கள் மூவரும் அருளிய தேவாரத் திருப்பதிகங்களேயாகும் எனலாம்.

பண்டைக்காலப் புலவர்கள், தனி மனிதர்களையும், ஆறு, கடல், மலை முதலிய இயற்கைப் பொருள்களையும் பாடிவந்த இசை மரபுகளை மாற்றி, இறைவனைப் பாடி ஆன்மீக ஈடேற்றத்திற்கு வழிகண்டு, இசைத் தமிழால் மக்களுக்கு நல்வழி காட்ட முடியும் என்ற உண்மையை உணர்த்திய தேவார ஆசிரியர்கள், இசையுலகில் மாபெரும் புரட்சி கண்டவர்கள் எனலாம்.

### தேவாரப் பண்ணும் தியாகையரும் :

தேவாரப் பண்ணமைதிகளைக் கண்டே தியாகையர் போன்ற இசைவாணர்கள், கீர்த்தனை அமைப்புகளை உருவாக்கினர் என்பர். தியாகையர், தமிழ்நாட்டில் திருவையாற்றில் வாழ்ந்து வந்தபோது தேவார இசைவாணர்கள் பலருடைய பாடல்களைக் கேட்டிருக்கக் கூடும். தேவாரப் பண்ணமைப்பினை அடியொற்றிச் சற்று விரிவு செய்து அவர்பல கீர்த்தனைகளை உருவாக்கினார் என்பதில் பிழை இல்லை எனலாம்.

### தேவார இசையின் தனிச் சிறப்பு :

தேவாரப் பண்ணமைப்பும் பாடும் முறையும் தமிழிசை உலகில் தனிச் சிறப்புடைய இசை மரபுகளைக் கொண்டனவாகும். இசை உலகில் கீர்த்தனை எனப்படும் இசைப் பாடல்களில், இராகச் சிறப்புக் கூறுகள், பாட்டின் நடுப்பகுதியில் அமைந்து தோன்றும். ஆனால், தேவாரப் பண்ணமைப்பிலோ எடுத்த எடுப்பிலேயே இராகத்தின் சிறப்புக் கூறுகள் அமைந்து விளங்கும். உதாரணமாக 'மீளா அடிமை' என்ற பாடலைப் பண்ணிசைவாணர் பாடத் தொடங்கும்போதே அப் பாடலுக்குரிய மத்தியமாவதி இராகச் சிறப்புக் கூறு, எடுத்த எடுப்பிலேயே வெளிப்பட்டுத் தோன்றி நிற்கக் காணலாம். இவ்வாறே பல திருப்பதிகங்களின் பண்ணிசை அமைப்புகளும் உள்ளன என்பதை இசைவாணர்கள் பலரும் கூறக் கேட்டுள்ளோம்.

ஒவ்வொரு சமயத்தவரும் தங்கள் தங்கள் சமயத் தோத்திரங்களுக்கென்று தனி இசை மரபை அமைத்துக் கொண்டிருத்தலைக் காணுகிறோம்.

வைணவர்கள் திருவாய்மொழியை ஓதுதற்கு என்று தனி மரபு வைத்துள்ளனர். இவ்வாறே நம்மோடு வாழும் ஒவ்வொரு சமயத்தவரும் தனித்தனியான இசையமைப்பைத் தங்கள் சமயத்துக்கென்று அமைத்துக்கொண்டுள்ளனர். அதுபோலச் சைவர்களும் தங்கள் மத வேதமாகிய திருமுறைகளைப் பழமையான பண்முறைகளைப் பின்பற்றியே பாடுதல் முறையாகும்.

### பாட்டுக்காகவே இசை :

திருமுறைப் பாடல்களைப் பொறுத்தவரை, பாட்டுக்காக இசையே தவிர, இசைக்காக அப் பாடல்கள் இல்லை என்பதைப் பண்ணிசைவாணர்கள் மறத்தல் கூடாது. திருமுறைகளை ஓதும்போது, அதனைக் கேட்கும் மக்கள் நெஞ்சுருகி இறையன்பில் ஈடுபடும்படி பாடுவதே முறையாகும். பழமையான தேவாரப் பண்ணமைப்பின் சிறப்புகளை ஆராய்ந்து உலகிற்கு எடுத்துரைத்து வரும் சென்னைத் தமிழிசைச் சங்கத்தைப் பாராட்டுகிறோம்.

### தமிழ் இசைச் சங்கத்துக்குப் பாராட்டு :

தமிழகத்தில் தமிழிசை வளர்ச்சிக்கு அரிய பல தொண்டுகளை ஆற்றிய செட்டிநாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் அரிய முயற்சியில் உருவான சென்னைத் தமிழிசைச் சங்கம், முப்பத்து நான்கு ஆண்டுகளாக மேற்கொண்டு ஆய்வு செய்து தேவாரப் பண் முடிபுகளை வெளியிட்டு வருவது, தமிழிசைக்கும் சிறப்பாகத் திருமுறை வளர்ச்சிக்கும் துணை புரிந்து வருகிறது.

தமிழிசைச் சங்கம் மேன்மேலும் வளர்ந்து சிறக்கவும், தேவாரப் பண்களின் சிறப்பைத் தமிழகம் போற்றிக் கொண்டாடவும், இந்நற் பணிகளில் ஈடுபட்டுத் தமிழிசை வளர்ச்சிக்குச் செயலாற்றும் அன்பர்கட்கு நலம் பல விளையவும் செந்திலாண்டவன் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

———

# *தொல்காப்பியர் குறிக்கும் ஆதிமுதற் பெரும்பண்

[டாக்டர் வீ. ப. கா. சுந்தரம்,

இசை ஆய்வுப் பேராசிரியர்,

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்.]

## தமிழிசை வரலாறு :

தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய முது பெரும் நூல்களில் பழந்தமிழிசை முளைத்துச் சிலப்பதிகாரத்தில் செழித்து வளர்ந்து நிழல் தரும் மரமாகி நிற்கிறது; பன்னிரு திரு முறையிலும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத் திருநூல்களில் கனி யீந்து களிக்கின்றது. எனவே, தென்னக இசைவரலாறு எழுதுங் கால் தொல்காப்பியத்திலிருந்து தொடங்குதல் வேண்டும். 'உலக இசை' என்னும் பொருள்பற்றி எழுதிய புதிய பெரிய நூல்கள் மேலைநாட்டு நூல்களில் உள்ளன. அவற்றிலே தென்னக இசை தாழ்த்தி ஒதுக்கப்பட்ட சிற்றிடமே பெற்றுள்ளது; சீரிய இடம் கிடைக்கச் செய்யும் திட்டங்கள் நம்மிடமில்லை. தமிழிசை வரலாறு பற்றிய நல்ல நூல்கள் வெளியிடும் திட்டங்கள் நம்மிடம் இல்லை.

## கருப்பொருள்களுள் 'யாழ்-யாழின் பகுதி' :

தொல்காப்பியர்—மாந்தன் தங்கும் நிலத்தையும் வாழும் காலத் தையும் 'முதற் பொருள்' என்றார். நுண்பொருளையோ பருப் பொருள்களையோ தோற்றுவித்தற்குக் காரணமான பொருட்களைக் கருப்பொருள் என்றார். அவர் கூறியுள்ள தெய்வம், உணவு, விலங்கு, பறவை முதலிய கருப்பொருள்களின் வரிசையில் யாழை யும் சேர்த்துள்ளார். இங்கு 'யாழ்' என்பது ஏழு நரம்புடைய பெரும் பண்ணைக் குறித்தது. பண் எவ்வாறு கருப்பொருளாகும்? பண் உணர்ச்சிகளைத் தோற்றுவிப்பதால், அது 'கருப்பொருள்' எனப் பட்டது.

ஒவ்வொரு வகை நிலத்திற்கும் ஒரு பெரும் பண் உரியது என்று, தொல்காப்பியத்திற்கும் முற்பட்ட தமிழர்கள் வகுத்திருந் தார்கள்; அவை முல்லையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், நெய்தல் யாழ் என்பன. நிலத்திற்குரிய சிறு பண்களைப்பற்றியும் தொல் காப்பியர் குறிப்பிடுகின்றார். அவற்றை 'யாழின் பகுதி' என்றார்.

---

* 35 ஆம் பண்ணாராய்ச்சிக் கூட்டத்தில் ஆற்றிய உரை.

''யாழின் பகுதி'' என்பதற்கு இளம்பூரண அடிகளார் கூறும் விளக்கம் வருமாறு: ''யாழின் பகுதி என்பது பண்; அது சாதாரி'' என்றுர். சாதாரியை அடியார்க்கு நல்லார் தம் பதிகவுரையில் (உ. வே சா. சிலப். பதிகம் பக். 15) முல்லைத் தீம்பாணி என்னும் சிறு பண் எனக் குறித்துள்ளார். எனவே, முல்லை நிலத்திற்குரிய சிறுபண் அல்லது கிளைப்பண் முல்லைத் தீம்பாணி என அறியலாகும்.

இனி ''யாழ்'' என்பது பெரும் பண்ணையும் ''யாழின் பகுதி'' என்பது சிறு பண்ணையும் குறிக்கின்றது. இதற்கிணங்க அடியார்க்கு நல்லார் ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய 'யாழும்' சிறு பண்ணும் நாலு நிலத்திற்கும் குறித்து அவை சிலப்பதிகாரத்தில் எந்தெந்தக் காதையுள் எங்கெங்கு எவ்வாறு இடம் பெற்றுள்ளன என்றும் வரிசையாக நிறுத்தியும் காட்டியுள்ளார். இந்த இசைக் குறிப்புகள் கிடைத்தற்கரிய மாபெரும் கலைச் செல்வங்கள் ஆகும். தமிழிசை ஆய்வுக்கு உ. வே. சா. பதித்த சிலப்பதிகாரம் மட்டுமே செவ்விய முறையில் பயன்படுவது.

## முல்லையாழ் ஏது ?

சிலப்பதிகாரங் கொண்டு முல்லையாழ் எது எனத் தெளிவாய்த் திட்டமாய் அறியலாகும். இதுகாறும் புதைந்து கிடந்த பொன் மணிகளும் ஆழ்ந்து கிடந்த அரிய முத்துகளும் நம் கையில் கிடைக்கின்றன. முல்லையாழ்பற்றிச் சிலப்பதிகாரப் பதிகவுரையிலே அடியார்க்கு நல்லார் கூறிய குறிப்புகளினின்றும் அறிவன: முல்லை யாழ் என்பது ஏது? ஆய்ச்சியர் குரவைக் கூத்து ஆடியபோது முல்லைநிலக் கடவுளால் கிருட்டிணனைத் துயர்நீங்கத் தொழுது பாடிய பெரும்பண்ணே—''முல்லை யாழ்'' என்று விளக்கியுள்ளார்.

குரவைக் கூத்து ஆடுதற்கு ஏழு ஆய்ச்சியர்கள் வரிசையாக ஒரு வட்டத்தில் நிற்கின்றுர்கள். மேற்குத் திசை (குடதிசை) யிலிருந்து கிழக்கு முகமாக வட்டத்தில் சுற்றி நிற்கின்றுர்கள். இவர்கள் எழுவர்க்கும் இசை நரம்புகளின் பெயர்கள் இடப்படுகின்றன: அவை குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. இந்த ஏழு இசை நங்கையருக்கும் பன்னிரு இராசிகளுள் ஏழு இராசிகளின் (கோள்களின்) பெயரும் இடப்படுகின்றன. இவற்றை இளங்கோ கூறுவது வருமாறு:

> ''தொன்றுபடு முறையால் நிறுத்தி
> இடைமுது மகளிர்க்குப்
> படைத்துக்கோள் பெயர் இடுவாள்

குடமுதல் இடம்முறையாக் குரல் துத்தம்
கைக்கிளை உழைஇளி விளரி தாரமென
விரிதரு பூங்குழல் வேண்டிய பெயரே"
[சிலப். ஆய்ச். 17 (13) 5-10.]

அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரப் பதிகவுரையிலே — இந்த இடத்தைச் சுட்டிக்காட்டி இந்த ஏழு நரம்புகள் கொண்டதே ''முல்லை யாழ்'' என்று குறித்துள்ளார். அவர் கூறியுள்ளது வருமாறு :

"குடமுதல் இடமுறையாக் குரல்துத்தம்......
...........வேண்டிய பெயரே என்பதனுல்
முல்லையாழ் கூறப்பட்டது"

என்றுர். மேலும் தம்முடைய உரையில் இந்த கு.து.கை.உ.இ.வி.தா. எனும் ஏழ் நரம்புகள் எவை? அவற்றின் நரம்பு வீடுகள் எவை? (சுரத்தாளங்கள்) என்றும் விரிவாக விளக்கியுள்ளார். இந்த ஏழு சுரத்தாளங்கள் செம்பாலைப் பண்ணின் சுரத்தாளங்கள் என்று குறிப்பிடுகின்றுர். எனவே செம்பாலையே—''முல்லை யாழ்'' என்பது தெளிவு.

**முல்லையாழின் ஏழ் நரம்பு வீடுகள் :**

12 இராசிப் பெயர்கள் : (1) துலாம் (துலைக்கோல் — தராசு) (2) விரிச்சிகம் (தேள்), (3) தனு (வில்), (4) மகரம் (மீன் விலங்கு), (5) கும்பம் (குடம்), (6) மீனம், (7) மேடம் (ஆடு), (8) இடபம் (காளை), (9) மிதுனம் (இரட்டையர்), (10) கடகம் (நண்டு), (11) அரி (சிங்கம்), (12) கன்னி (குமரி). இவை பன்னிரு நரம்பு வீடுகளைக் குறிப்பன. இவற்றுள் 1, 3, 5, 6, 8, 10, 11 என்னும் ஏழு வீட்டுக்குரிய நரம்புகளே—செம்பாலை அல்லது முல்லை யாழின் நரம்புகள் (சுவரங்கள்), இந்த ஏழு வீட்டில் நிற்கும் 7 நரம்புகளையும் பட்டியலிட்டுக் காண்போம்.

அவையாவன : குரல், வன்துத்தம், வன்கைக்கிளை, மெல்லுழை, இளி, வல்விளரி, மென்தாரம் : இந்த ஏழு நரம்புகள் கொண்டதே செம்பாலை யாழ், அல்லது முல்லையாழ், அஃது இன்றைய அரிகாம் போதி.

செம்பாலை நரம்புகள் நிற்கும் இராசி வீடுகளைக் கூறும் தொன்மைக்கால அகவல் செய்யுள் :

1 துலைநிலைக்குரலும் 2. தனுநிலைத் துத்தமும்
3. நிலைபெறு கும்பத்து நேர் கைகிளையும்

4. மீனத்து உழையும் 5. விடைநிலத்து இளியும்
6. மானக் கடகத்து மன்னிய விளரியும்
7. அரியிடைத் தாரமும் அணைவுறக் கொளலே.

(சிலப். ஆய்ச். 17 : 13 அடியார் உரை. மேற்.)

முல்லைப் பண் கண்டுபிடித்த வரலாறு:

அறிவனுர் எழுதிய பஞ்சமரபு என்னும் இசையிலக்கண நூலிலே பைந்தமிழிசைப் பாணர்கள் பண்டைக் காலத்தில் முல்லைப் பண்ணை எவ்வாறு கண்டுபிடித்தார்கள் என்று குறித்துள்ளார்.

மென்தாரம் (கை. நி.) முதலாக இணை நரம்பு (ச. ப. முறை சுவரம்) கண்டு, அதற்குமேல் இணை அதற் மேல் இணை என்று கொடுத்துக்கொண்டே சென்று தொடுத்தவற்றைத் தொகுத்தால் கிடைக்கும் பண்ணே 'பாலைப்பண்' என்ருர். தாரமுதல் தொடுப்பதை 1, 2, 3—7 வரை வரிசையிட்டுக் குறிக்கலாம்.

''தாரத்து உழைதோன்றப் பாலை யாழ்''

எவ்வளவு பெரிய இசை நுணுக்கம்—இரத்தினச் சுருக்கம்—பல கோடி ரூபாய்க்குச் சிறு காசோலை (செக்) போன்றது. கடுகினுள் கடலைப் புகுத்தியது. பஞ்சமரபு நூலார்—முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நானிலத்திற்குரிய பெரும்பண்களை வரிசையாய்க் கூறும் வெண்பாவிலே இதனை முதலில் கூறுகின்ருர். நானிலத்திற்குரிய யாழ்கள் (பெரும்பண்கள்)

வெண்பா

''தாரத் துழைதோன்றப் பாலையாழ்— தண்குரல்
ஓரும் உழைதோன்றக் குறிஞ்சியாழ்—நேரே
இளிகுரலில் தோன்ற மருதயாழ்— துத்தம்
இளியிற் பிறக்க நெய்தல் யாழ்''—(பஞ்சமரபு இசைநூல்)

(சிலப். ஆய்ச். 17-13 அடியா. உரை. மேற்)

1. தொல்காப்பியம்—நானிலங்களையும் நானிலப் பண்களையும் வரிசைப்படுத்திக் காட்டியுள்ளது.

''முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே''

என்று தொல்காப்பியம்—நிறுத்திய வரிசையிலேயே பஞ்சமரபும் பாலை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என வரிசைப்படுத்தியுள்ளதால்

—இங்குப் பாலை என்றது—செம்பாலைப் பண்ணையே சுட்டுகின்றது. எனவே, செம்பாலை என்றது முல்லைப் பெரும்பண்ணே. செட்டி நாட்டிலே ''செட்டியார்'' என்ருல், அரசர் அண்ணுமலைச் செட்டி யாரையே குறிப்பதுபோன்று—பாலை என்ருல் அடிப்படை பாலை தனையே குறிப்பது.

பாலை என்ற சொல்லுக்கு வேர்ச்சொல் வழிப்பொருள் பகுத் தளிப்பது அல்லது பிரித்தளிப்பது என்பது பாலையாழ் முதலில் நின்று— து.கை.உ இ.வி தா.—இவை குரல் குரலாகிப் பண்ணுப் பெயர்க்க 6 பெரும்பாலைகளைப் பகுத்தளிப்பதால்—''பாலை'' எனப் பட்டது. (ஒப்பு: பால்—து பாற்து—பிரி பகு. 'பணிவிடம் பாற்றுவித்தார்' —சேக். பெரியபு.) ஆறுபாலைகளைப் பரித்தளிக்கும் தாய்மையும் தலைமையும் முன்மையும் முதன்மையும் கொண்ட சிறப் புக் கருதிப் ''பாலை'' எனச் சுட்டப்பட்டுப் பெருமைப்படுத்தப் பட்டது.

2. பாலையாழின் நரம்புகளும் செம்பாலையாழின் நரம்புகளும் ஒன்றே; எனவே பாலையாழ் என்றது முல்லையாழே.

3. தொல்காப்பியர்—முல்லைக்கு அடுத்துக் குறிஞ்சியை நிறுத்தியதற்கிணங்கவே பஞ்சமரபார் நானிலப்பண்களில் பாலைக் கடுத்துக் குறிஞ்சியை நிறுத்தியுள்ளார். எனவே பாலையாழ் என்றது முல்லையாழையே.

4 முல்லைக்கு அடுத்துக் குறிஞ்சி போன்றே செம்பாலைக்கு அடுத்துப் படுமலை நிற்கிறது. படுமலை—குறிஞ்சியாதலால்—செம் பாலை—முல்லையாழ் ஆகியது.

5. செம்பாலையினின்றும் துத்தம் குரலாகப் படுமலை பிறக் கின்றது. பாலையாழினின்றும் துத்தம் குரலாகக் குறிஞ்சி பிறக் கின்றது. துத்தம் குரலாகப் பிறக்கும் படுமலையும் குறிஞ்சியும் ஒன்ருவதால் அவற்றை ஈன்ற செம்பாலையும் பாலையும் ஒன்றே. தாய்க்கு முல்லை, செம்பாலை, பாலை என்று மூன்று பெயர்கள்; மகளுக்குக் குறிஞ்சி, படுமலை, துத்தப்பண் என்று மூன்று பெயர்கள். இங்குத் தாய் ஒருத்திதான்; மகள் ஒருத்திதான்.

இனி செம்பாலையே முல்லையாழ் என்பதற்கு மேற்கூறிய கார ணங்கள் தவிர, மற்றும் இரு காரணமும் உண்டு.

6. ஆய்ச்சியர் குரவையில் (சிலப்) முல்லைநிலத்து ஆயர்கள், முல்லைநிலக் கடவுளை முல்லைநிலத்துப் பண்பாடிப் போற்றிப்பணிந்து

தம் துயர்நீக்க வேண்டுகின்றனர்—என்பதால்—முல்லை நிலத்தார் பாடியது முல்லைப்பெரும்பண் எனலாம்.

7. இனி இளங்கோ அடிகளார் முல்லைப்பண்ணின் நரம்பு வீடுகளை முல்லைநிலக் கடவுளர்களை வைத்தே விளக்குகின்றார். இவற்றாலும் முல்லைநில நங்கையர் பாடியது முல்லைப்பெரும்பண்ணே எனலாம்.

மாயவன் (கிருட்டிணன்) குரல் நிலத்தில் (ச), பலராமன்—(அண்ணன்)—இளி நிலத்தில்; (ப); தாரநிலத்தில்—தாய் யசோதை துத்தத்திலும் கைக்கிளையிலும்—நப்பின்னையும் மற்றோர் நங்கையும், பலராமனுக்கு இரு மருங்கிலும் உழை நிலத்திலும் விளரிநிலத்திலும் அவனுடைய இரு மனைவியர்கள். இவற்றிலே (கு.இ.—ச.ப) ஆடவர்கள்; இவர்கள் காத்தோம்பும் சிறப்பினர்கள்; பிற—து.கை. உ.வி.—மனைவியர்கள். தாரத்து உழைதோன்றப் பாலையாழ் என்ப தால்—தாரமுதல் இணைநரம்புகள் தொடுத்துத் தொகுப்பதால்—தார நரம்பானது தாய்நிலை எய்தி—யசோதையாகி நிற்கிறது.

செம்பாலையின் ஏழு நரம்புகளை முல்லைநிலத்துக் கடவுளர்களாக நிறுத்தி—இளங்கோவடிகள் பல இனிய செய்யுட்களில் (ஆய்ச். குரவை) விளக்குவதாலும் செம்பாலையே முல்லையாழ் என்று தெளியலாம்.

## இக் கட்டுரையின் கண்டுபிடிப்பு என்ன?

தொல்காப்பியம் குறித்த முல்லையாழ் என்பதும், சிலம்பு குறித்த செம்பாலை என்பதும், பஞ்ச மரபு குறித்த பாலையாழ் (தாரத்துழை தோன்றல்) என்பதும் ஒன்றுதான் என்றும் அதுவே முல்லைப் பெரும்பண் (சம்பூர்ண ராகம்) என்றும் இக்கட்டுரை முதன் முதல் நிறுவுகிறது. முல்லைப் பெரும்பண் என்பது இன்றைய அரிகாம் போதி (28-ஆம் மேளகர்த்தா) அதன் அலகு நிரல்கள்—4.4.3.2. 4.3.2.—22 அலகுகள். அதன் கிழமை நரம்புகள் (சீவசுரங்கள்) ''கை.உ.வி.தா'' என்பன. முல்லைப் பண்ணைப் பாடுதற்குரிய காலம்—கார்காலம் என்னும் பெரும்பொழுதும், மாலை என்னும் சிறுபொழுதும் ஆகும் (பண்களுக்கு நேரம் தொல்காப்பியம் வகுத்தது.)

''காரும் மாலையும் முல்லைக்குரிய''—(தொல். பொருள்) இது மங்களகரமான பண்; ''மங்கலப் பண்'' என்று பெயர் பெற்று விளங்கியது என்று சிலம்புரைஞர்கள் செப்புகின்றார்கள்.

8. முல்லைநிலத்து ஆயர்கள் கண்டுபிடித்த புல்லாங்குழல் முல்லைப் பெரும்பண்ணுக்குத் துளையிடப்படுவது. நாதசுரம் முதலிய துளைக்கருவிகள் முல்லைப் பெரும்பண்ணுக்கே துளையிடப்படுகின்றன.

9. அரி + காம்பு + ஊதி = அரிகாம்பூதி > அரிகாம்போதி என்றாயிற்று. அரி = மகாவிட்ணு; காம்பு = புல்லாங்குழல்; ஊதி = ஊதப்பட்ட பண்; அரிகாம்போதி — மகாவிட்ணுவால் குழலில் ஊதப்பட்ட பண் எனலாம். வண்டுகள் குழலில் ஊதிய பண் என்பார் சிலர்.

மேற்காட்டிய ஒன்பது காரணங்களால்—செம்பாலை என்பது முல்லையாழ் என நிறுவப்பட்டது.

முல்லைப் பெரும்பண் பற்றிப் பிற ஆய்வாளர்கள் :

1. மு. ஆபிரகாம் பண்டிதர் செம்பாலையை முல்லைப் பெரும் பண்ணாக எங்கும் குறிக்கவில்லை; பஞ்சமரபு வெண்பாவில் வரும் நானிலப்பண்களுள் ஒன்றாகிய பாலை யாழை—முல்லைப் பெரும்பண் என்று அவர் குறிக்கவில்லை. முல்லைப்பாணி என்பது மூன்று தாயிகளிலும் சுரங்களைப் பின்னி அடுக்குவது என்றுதான் விளக்கியுள்ளார் (கருணா. சா. பத். 691).

2. விபுலானந்தர் தம் யாழ் நூலிலே (1974) ''நெய்தல் யாழ் எனக் குறிப்பிட்டது முல்லையாழாகிய செவ்வழி யாழினையே'' என்றார் (பக். 177) பஞ்சமரபு வெண்பாவில் நெய்தல் யாழ் என்று கூறியிருப்பதை ''முல்லையாழ்'' எனக்கொண்டு மூலப்பாடலையும் திருத்தி அமைத்து—நெய்தலே முல்லை எனக் காட்டியுள்ளார். (பக். 175, 289 முதலிய இடங்களில் பார்க்க).

முல்லை நிலம் வேறு; நெய்தல் நிலம் வேறு; முல்லைப்பண்ணை நெய்தற் பண்ணாகக் கொள்ளுவது பண்டைய பகுப்பு நெறிமுறைக்குப் பொருந்துவதாகத் தோன்றவில்லை. ஆனால் செம்பாலையை அரிகாம்போதி என்று முதன்முதல் கண்டருளியவர் வணக்கத்திற்குரிய அடிகளாரே.

3. டாக்டர் எசு. இராமநாதனார் தம் சிலப்பதிகாரத்து இசை நுணுக்க நூலிலே (1956) (பக். 76)—'பாலையாழ்—செம்பாலை—அரிகாம்போதி' என்று அடிக்குறிப்பில் குறித்துள்ளது பெரிதும் பாராட்டற்குரியது. மேலும் முல்லைத் தீம்பாணி என்பது மோகனம் என முதன்முதற் கண்டருளிய முதுபெரும் அறிஞர் (பக். 64);

முல்லைத் தீம்பாணி என்பது 5 நரம்புத்திறப்பண்ணே (சிறுபண்ணே) இவரும் செம்பாலைப்பண்ணே முல்லை நிலப் பெரும்பண் என்று தம் நூலுள் (1956) எங்கும் கூறி விளக்கவில்லை. குறிஞ்சி, மருதம், நிலங்கட்குப் பெரும்பண் உரியன போன்றே முல்லைக்கும் பெரும்பண் உரியதே. முல்லைத் தீம்பாணி—முல்லை நிலப்பெரும்பண் ஆகாது.

இனி குறிஞ்சியாழ் மருதயாழ், நெய்தல்யாழ்பற்றி ஆராய்ச்சி யாளர்களிடையே ஒருவரோடொருவர் பெரிதும் முரண்பட்டுக் கூறி வரும் கருத்துகள் பல உண்டு. அடுத்து வரும் பண்ணுய்வுக் கூட்டங்களில் அவைபற்றிக் காண்போம்.

நான் புல்லாங்குழல்பற்றிப் பேச ஆசைப்பட்டேன்; அமைப் பாளர் கருப்பொருள்பற்றிப் பேச ஆணையிட்டார். காரணம் லெ.ப.கரு. இராமநாதப் பெருந்தகையின் பெயரில் ''கரு'' என்று இருப்பதுவே. என் சிந்தனைகளை உரைக்க வாய்ப்புக்கிட்டியது; என்றும் நன்றி.

''அன்பரசர் ராமசாமி ஆட்சி அருளால்
இன்புறும் பண்ணுய்வு இசை''

———

## எந்த நாளோ!

### [நாகை. வேலன்]

நீதிநெறி நூல்கள்பல நிறைந்ததமிழ் நாடு
நினைத்தாலே இனிக்கின்ற இலக்கியப்பூங் காடு
ஓதுகின்ற பெருமையெலாம் ஒருங்கிருந்த போதும்
உண்மைநிலை அறிந்திட்டால் உள்ளமெலாம் நோகும்
ஆதியிலே இருந்தநிலை அரசியலால் இன்று
அலக்கழியும் அவலநிலை அறிந்திடுதல் நன்று
சாதிமத பேதமென்னும் சகதியிலே இந்நாள்
பூத்திட்ட காளான்கள் பலவளரக் கண்டோம்.

மொழியென்றும் இனமென்றும் முப்போதும் முழங்கி
முன்னணிக்கு வந்தவர்கள் தந்நிலையை மறந்தே
விழிப்புற்ற தமிழினத்தை வழிதிருப்பி விட்டு
அழித்திட்டார் அடிப்படையை அரசியலின் பெயரால்
மொழிப்பற்றை முதலாக்கிப் பொருளீட்ட நினைத்துப்
பழிப்புக்கு இடனுகிப் பரதவிக்கும் தமிழர்
பழகுதமிழ் மொழிபோற்றி பண்டைநிலை எய்த
விழிபெற்று எழுகின்ற நாளெந்த நாளோ!

# "பர்" என்னும் வேர்ச்சொல்

[கழக இலக்கியச் செம்மல்,
புலவர் இரா. இளங்குமரன்]

[முன் இதழ் கூ௨டுஆம் பக்கத் தொடர்ச்சி]

ஓங்கிய புகழாளர் 'பரந்தோர்' எனப்பட்டதை அறிந்தோம். பரந்தோர் என்பது புகழாளரை அன்றி இரவலரையும் குறிக்கும். ஒரு தொழிலால் ஓரிடத்து ஊன்றி இராமல் பொருள் கிடைக்கும் இடத்தெல்லாம் அலைந்து திரிதல் அவர்க்கு இயல்பாகலின் அப் பெயர் பெற்ருர்.

பரவிய நிலம் 'பரப்பு' எனப்படும். அன்றியும் வரையும் வானும் கரையும் கடலும் பரவிக் கிடத்தலும் பரப்பெனப்படும்.

"வரைப்ப ரப்பும் வனப்ப ரப்புமொளித்
தரைப்ப ரப்புவ தென்னத் தனித்தனி
உரைப்ப ரப்பும் உறுகிரி ஒண்கவி
கரைப்ப ரப்புக் கடற்பரப் பானதால்"

—கம்ப. உயுத்த. 683

விரிந்து கிடக்கும் படை பரப்பு எனப்படுதல் 'சேனையின் பரப்பி ஞன்' என்பதால் தெளிவாம். (கம்ப. அயோத். 1093)

பரவிய நிலத்தை அளக்கும் அளவை பரப்பளவை பரப்பளவு எனப்படுதல் நாட்டு வழக்கு. கணக்கு வகைகளில் பரப்புக் காணல் உண்டு. அளவையர் எனப்படுபவர் (சர்வேயர்) பரப்பளவையரே.

'பெரிது பெரிது புவனம் பெரிது' என்பது எவரும் அறிந்தது. பெரிய புவிக்கும் கடலுக்கும் ஒரு பெயர் 'பரப்பகம்' என்பது. பாடிமிழ். பரப்பகம் என்பது கலி (10) புணர்திரைப் பரப்பகம் என்பது அகம் (80) குவித்து வைத்த ஒன்றை அகலப்பட விரித்தல் 'பரப்புதல்' எனப்படுவது நடைமுறை. விளம்பரப் படுத்துதலும் பரப்புதலே.

நிலப்பரப்பை நிரவலாக்குதற்குப் பரம்படித்தலே உழவர் செய்வர். அதற்குரிய கருவி 'பரம்பு' என்றும் பரம்புச் சட்டம் என்றும், பரம்பை என்றும் வழங்கப்படும். பரப்போடு பரம்பையும் ஒருங்கு சுட்டினுர் கம்பர்:

''பரம்பெலாம் பவளம் சாலிப் பரப்பெலாம் அன்னம்''
—அயோத். 34

உழு தொழிலில் அடித்தல் என்னும் வினை பலவகைகளில் ஆளப்படும். உழவடித்தல், கதிரடித்தல், பலகடித்தல் என்பன போலப் பரம்படித்தல் என்பதும் ஓரடித்தலாக வழங்கும்.

''எங்கணும் பரம்படிப்பவர் பற்பல கோடியே''

என்பது அரிச்சந்திர புராணம் (நாட்டுப். 33).

அகலுதல் அல்லது விரிதல் பொருளில் 'பரம்புதல்' என்பது வழங்குதல் 'வரம்பில பரம்பி' என்பதால் அறியலாம். (கம்ப. உயுத். 2012).

ஒரு நிலைப்படாது பார்த்தலும், ஓடலும், உணர்வைக் காட்டலும் 'பரபரப்பு' எனப்படும். இரட்டைக் கிளவியாகிய 'மத மதப்பு' 'பளபளப்பு' என்பன போலப் 'பரபரப்பு' என்பது வரினும் நிலைப் படாது அகலுதல் பொருளில் வருவதேயாம்.

வந்த ஒருவன் நில்லாமல் உடனே போய்விடுதல் 'பரபர வென்று' போய்விட்டான் என்பதால் விளங்கும். அகலச் சொறிதல் பரபரவென்று சொறிதல் என்று சொல்லப்படும். 'பரட்டுப் பரட்டு' என்பதாம் ஒலிக் குறிப்பும் பரந்துபட்டதடிப்பட்டதே.

உற்றார் உறவினர் அல்லாத அயலார் 'பரர்' எனப்படுவர். அயல்நாடு 'பரதேயம்' எனப்படும். நாடு என்பது விரும்பத்தக்கது விருப்பத்துக்குரியது என்னும் பொருள் தருதல் போல்வது 'தேயம்' என்பதும் முன்னாளில் 'தேஎம்' என வழங்கியதே. பின்னே தேயம் ஆகித் தேசமும் ஆயிற்றாம்.

''கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்''

என்பது தொல்காப்பியம் (பொருள். 68)

'தேஎம்', தேம் எனவும் வழங்கும்.

'தேம்' இனிமை அல்லது விருப்பப் பொருட்டாதல் பெருவரவிற்று. 'தேம்படு பனையின் திரள்பழம்' என்பது வெற்றி வேற்கை. 'தேம்பாய் புன்னை' என்பது புறநானூறு (24). தேம், 'தீம்' ஆதலும் 'தீ' ஆதலும் மேலும் திரிநிலைகள்.

பரதேயத்து மாந்தர் 'பரதேயி' என்றாகிப் 'பரதேசி' எனவும் வந்தது. இரப்பார் தம் பிறப்பிடம் விடுத்து வேற்றிடம் செல்லுதல்

மானத்தின்பட்டதாதலால் அவர்க்குப் 'பரதேசிப்' பெயர் வந்தது. இவண் 'தேயம்' 'தேசம்' என்பன இடம் என்னும் பொருளன.

சிலம்பு என்னும் மாதர் அணிகலத்தில் மெல்லிய இனிய 'சலசலப்பு' ஒலி உண்டாகுமாறு இடப்படும் கல்லும் மணியும் முத்தும் பிறவும் 'பரல்' எனப்படும். சிலம்பின் உள்வெளி விரிவுடையதாகவும் அதனுள் சிறுமணி சிலவாக இடப்பெறுதலாலும் அவை இடமகலச் சென்று ஒலியெழுப்ப வாய்க்கும். அதனுல் பெற்ற பெயரே 'பரல்' என்பதாம். உள்ளிடு பரலால் கோவலன் குற்றவாளி யல்லன் என்பதும், நெடுஞ்செழியன் செங்கோல் வேந்தன் என்பதும் நாடறிய வாய்த்ததாம்.

பரவிக் கிடந்து காலுக்குத் துன்பூட்டும் கல், பரல் எனவும் படும். நடைவழியில் பரற்பகை உறுத்துதலேயும் (நாடுகாண். 75) கண்ணகியார் சிறுமெல்லடி பரற்பகை பொறுக்க ஒண்ணுமையையும் (நாடுகாண் 52) இளங்கோவடிகளார் இயம்புவார்.

பரவல் என்பது சொல்லுதல், பரவுதல், பல்லாண்டு கூறுதல், புகழ்தல், அகன்றிருத்தல் முதலிய பொருள்களேயுடையது. பலபல விரியச் சொல்லுதலே பரவுதல் அல்லது பரவலாம். அது பரவல் அல்லது 'பராவல்' என்றும் வழங்கும். 'பராஅம்' 'பராஅய்' என அளபெடை நிலேகொள்ளலும் உண்டு.

'பராவரு மரபினேச்' சுட்டும் மலேபடு கடாம் (230). 'அணங்கெனப் பராவலேக்' குறிக்கும் பதிற்றுப்பத்து (71). தன்வயம் கடந்து அயல்வயப்படல் 'பரவயம்' ஆகும். அப் பரவயமே, 'பரவசம்' என வழங்கப்படுகின்றது. வயப்படுத்துதல் என்பது வசப்படுத்துதல் என்று சொல்லப்படுவதை அறிக. கைவயம், நேயம் என்பவை 'கைவசம்' 'நேசம்' என வேற்றுச்சொல்போல் வழங்குகின்றன அல்லவோ ? ஒலித் திரிபு மொழித் திரிபாக்குதல் ஈதாம்.

மாட்டை வேலேக்கு வயமாக்குதல் அல்லது வயக்குதல் இப்பொழுது 'வசக்குதல்' என்றே வழங்குகின்றது. 'இயைவும், இசைவும்' ஒப்புடன் வழங்கக் காண்கின்றேம் அன்றே !

பரவர் என்பார் பரதவர் என்பதை முன்னரே அறிந்துள்ளோம். கடல் பரவை எனப்படுதலால் அதனே ஆளும் மாந்தர் பரவர் எனப் பட்டனர் என்பதும் அறிந்ததே.

காற்று வெளியைக் கடந்து அப்பாலாம் பாழ்வெளி பரவெளி எனப்படும். அப் 'பரம்' என்பதும் அப்பாலுக்கு அப்பால் என்னும் அகலுதல் பொருட்டதே.

பரவுதல் என்பது 'பராவுதல்' என வருவது போலப், பரவும் என்பது 'பராஅம்' எனவும் வரும். காற்ருலும் ஈக்களாலும் பரவிச் செல்லும் பூத்துகள் 'பூம்பராகம்' எனப்படும். 'பராகம்' என்பது பரவிச் செல்லும் நுண் துகளைக் குறிப்பதேயாம்.

இனிப் 'பராமுகம்' என்பதும் 'பராரி' என்பதும் 'பராரை' என்பதும், பரவுதல் பொருள் வழிவந்த சொற்களே. பார்க்க வேண்டியவரைப் பார்க்காமல் அயலே பார்த்தல் பராமுகம். குறித்த வழிகளுக்கு அல்லாமல் வேண்டாப் பல வழிகளுக்கும் செலவிடுதல் பராரித் தன்மை அகன்ற அல்லது பருத்த அடி மரம் 'பராரை'யாம்.

வலிய யானையைப் பிணித்த மரத்தின் அடி, வேரொடு வருதலைக் குறிக்கும் புறப்பாடல்,

> ''விளங்குறு பராரைய ஆயினும் வேந்தர்
> வினைநவில் யானை பிணிப்ப
> வேர்துளங் கினநம் மூருள் மரமே''

என்பது அது (347).

(தொடரும்)

---

## பேராசிரியர் இரா. செல்வக்கணபதிக்கு 'டாக்டர்' பட்டம்

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் தருமபுர ஆதீனத்தின் தமிழ் வளர்ச்சிப் பணிகளைப்பற்றி மேற் கொண்ட ஆய்விற்காகச் சென்னைப் பல்கலைக் கழகம் 'டாக்டர்' பட்டம் வழங்கியுள்ளது. இவர் தமிழ் வித்துவான் தேர்வில் முதன்மைபெற்று, திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் 1000/- ரூபா பரிசினைப் பெற்றவர். தற்போது பாரதிதாசன் பல்கலைக் கழகப் பேரவை உறுப்பினராகவும், பணியாற்றி வருகிருர். நல்ல சமய, இலக்கியப் பேச்சாளர். டாக்டர் பட்டம் பெற்ற இப் பேராசிரியருக்கு நமது வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்ளு கிரேம்.

# ஏட்டளவில் நின்றுவிட்ட குறள்நெறி

[பேராசிரியர் மு. ரா. பெருமாள் முதலியார்]

(முன் இதழ் கசுOஆம் பக்கத் தொடர்ச்சி)

சமயத்துறையிலும் நன்னெறித் துறையிலும் வடவர் கருத்து களின் செல்வாக்குச் சங்ககாலத் தமிழகத்தில் ஓங்கியிருந்தது. அரசர்கள் ஏராளமான பொருட்செலவில் வேள்விகள் பலவற்றைச் செய்தார்கள் என்பதைச் சங்க நூல்கள் கூறுகின்றன. அதனால், வேதமதம் அந்தக் காலத்திலேயே தமிழகத்தில் நன்கு வேரூன்றி விட்டது என்பது தெரிகிறது. வேதமோதுவதிலும் மதச்சடங்கு களைச் செய்வதிலும் தம் காலத்தைச் செலவிட்ட பார்ப்பனர் தமிழகச் சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் இருந்தனர். சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயன் என்பவனைப் பற்றிய செய்திகள் பலவற்றை ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவர் புறப்பாட்டு 166இல் குறிப்பிடுகிறார். பார்ப்பன மதம் சங்க காலத்தில் தலையாய நிலையில் இருந்தது. ஆனால், சங்க காலத்தின் முடிவிலேயே பௌத்தமும் சமணமும் தமிழகத்தில் வளரத் தொடங்கின.

சங்க காலத்திற்குப் பின்வந்த காலத்தைத் தமிழக வரலாற்றில் ''இருண்டகாலம்'' என்று சொல்வது வழக்கமாகிவிட்டது. அந்தக் காலத்தில் பார்ப்பனமதம் செல்வாக்கிழந்துவிட்டது, பௌத்த சமணமதங்கள் ஓங்கியிருந்தன. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் பெரும்பாலானவை அப்போதுதான் எழுதப்பட்டன. பார்ப்பனர் தமது மேம்பாட்டை இழந்தனர் என்பதால்தான் அக்காலத்தை இருண்டகாலம் என்று சொல்கின்றனர். திருக்குறளும் சிலப்பதி காரமும் எழுதப்பட்ட காலம் இருண்டகாலமாய் இருக்க முடியுமா?

வடநாட்டில் கி.பி. 320 முதல் ஏறக்குறைய கி.பி. 600 வரையில் குப்த அரசமரபினர் மிகுந்த வலிமை பெற்றிருந்தனர். அப்போதுதான் வடமொழி மிக உயர்ந்த நிலையை எய்தியது. பிராமணமதமும் புது வலிமை பெற்றது. பதினெண்புராணங்கள் அந்தக் காலத்தில் எழுதி முடிக்கப்பட்டன. அதே காலத்தில் காஞ்சீபுரத்தில் பல்லவர்கள் தங்கள் ஆட்சியை நிறுவிக்கொண் டார்கள். அவர்கள் வடக்கேயிருந்து வந்தவர்கள்; பிராமண மதத் தையும் வடமொழியையும் ஆதரித்தவர்கள். அவர்கள் பார்ப்பனர் களுக்கும் அவர்கள் கோயில்களுக்கும் மானியங்கள் பலவற்றை

வழங்கினுர்கள், மெல்ல மெல்லக் காஞ்சீபுரம் வடமொழிக்குப் பேர்பெற்ற நகராக மாறியது. அந்த நிலையில் பல்லவப் பேரரசனுன மகேந்திரவர்மன் (ஏறக்குறைய கி.பி. 580இல்) காஞ்சீபுரத்தில் பல்லவ அரியணை ஏறினுன். அவனுடைய தந்தையும் பாண்டிய மன்னன் கடுங்கோனும் களப்பிரர் வீழ்ச்சிக்கு முக்கியமான காரண ராயிருந்தார்கள்.

தமிழகத்தில் களப்பிரர் ஆட்சி கழிந்த பின்னர் ஏறக்குறைய கி.பி. 850 ஆம் ஆண்டு வரையில் பல்லவர் ஆதிக்கம் ஓங்கி யிருந்தது. அப்போது பாண்டியர்களும் நல்ல நிலையில் இருந் தார்கள், அப்போதுதான் (சுமார் 580 முதல் 850 வரை) இந்து மதம் (சைவமும் வைணவமும்) தலையெடுக்கத் தொடங்கியது. அஃதாவது, பார்ப்பன ஆதிக்கம் மீண்டும் தமிழ்நாட்டில் தலைதூக் கியது. திருஞான சம்பந்தருடைய கதையைக் கூறவந்த பெரிய புராணம் "வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறை விளங்க" அவர் திருவவதாரம் செய்தார் என்று பாடுகிறது. திருஞான சம்பந்தரும் திருமங்கை ஆழ்வாரும் சமணர்களைக் கடுமையாய்த் தாக்கினுர்கள். அவர்களுக்குப்பின் சமணம் தமிழகத்தில் மிகச் சில இடங்களில் மிகச் சிலரால் மட்டுமே பின்பற்றப்பட்டது. பௌத்தம் இந்தியாவை விட்டே போய்விட்டது. அப்படிச் சொல்வதைக் காட்டிலும், இந்துமதம் பௌத்தத்தை விழுங்கிவிட்டது என்று சொல்வது பொருத்தமாய் இருக்கும். பார்ப்பனர்கள் புத்தரையே இராமனைப் போன்ற ஓர் அவதாரமாக ஏற்றுக்கொண்டார்கள்.

மேலே சொன்ன செய்திகளை வைத்துக்கொண்டு பார்க்கும் போது சங்க காலத்தில் செல்வாக்குடன் இருந்து "இருண்ட காலத்தில்" நலிந்து போயிருந்த பார்ப்பன மதமும் ஆதிக்கமும் புத்துயிர் பெற்றுக் கி. பி. ஏழாம் நூற்ருண்டிலிருந்து மிகவும் விரை வாய் வளரத் தொடங்கின என்பது தெரிகிறது.

பல்லவர் காலத்தில் மிக வளர்ந்த பிராமணமதம் சோழர் காலத்தில் உச்சநிலையை அடைந்தது. சோழ அரசர்களுள் மிகவும் புகழ் பெற்றவன் இராசராசன், அவன் தஞ்சையில் பெருவுடை யார் கோயிலைக் கட்டி அவனுக்குப் பின்வந்த அரசர்களுக்கு அத் துறையில் முன்மாதிரியாய் விளங்கினுன். பெருவுடையார்கோயில் கி.பி. 1005ஆம் ஆண்டில் கட்டி முடிக்கப்பட்டது என்பது பொது வான கருத்து.

பார்ப்பன மதம் அல்லது புதிய இந்துமதம் மேலும் மேலும் வளர்ந்தது. வேதங்களும் ஆகமங்களும் சமய வாழ்க்கையிலும் கோயில்களிலும் உச்சநிலை பெற்றன. மக்கள் சமுதாயத்தில் பார்ப்

பனர் உச்சநிலையில் இருந்தனர். அவர்களுக்கு வழங்கப்பட்ட இறையிலி நிலங்கள் எண்ணற்றவை. அந்த நிலங்கள் பார்ப்பனர் அல்லாதோர்க்குச் சொந்தமாய் இருந்தவை. அவை பார்ப்பன ருக்கு மானியமாய்க் கொடுக்கப்பட்டபின் பார்ப்பனரல்லாதோர் தமது உரிமையை இழந்து பார்ப்பனர்களுக்கு அடிமைகளாய் மாறி, அதே நிலங்களில் கூலிக்குழைக்கும் கொடிய நிலைக்குத் தள்ளப் பட்டனர். பார்ப்பனர் எவ்வித உடலுழைப்பும் இல்லாமல் உண்டு கொழுத்தனர். அன்றியும், அவர்கள் பார்ப்பனரல்லாதோரை மிகவும் தாழ்வாய் மதித்தார்கள். பார்ப்பனர் அல்லாத அரசர்கள் கட்டிய கோயில்களில் பார்ப்பனர் முதன்மை பெற்றனர். கோயில் களுக்கு வழங்கப்பட்ட மானியங்கள், முன்னரே சொன்னபடி, எண்ணில் அடங்கா. இராசராசன் செய்த போர்கள் பலவற்றிலும் கொள்ளையடித்து வந்த பொருள்களைப் பெருவுடையார் கோயிலுக்கு வாரி வாரி வழங்கினான். அவன்றான் தேவாரத் திருமுறைகளைத் தில்லைப் பார்ப்பனர்களிடமிருந்தும் கறையான்களிடமிருந்தும் மீட்டவன் எனினும், கோயில்களில் வேதாகம முறைப்படிதான் வழிபாடு நடைபெற்றது. திருமுறைகளுக்கும் திவ்வியப்பிரபந்தத் திற்கும் கோயில்களில் போதுமான மதிப்பில்லை. ஆக, தமிழின் இடத்தை வடமொழி கைப்பற்றிக்கொண்டது. இராசராசனே வேத பாடசாலைகளைத் தஞ்சையில் நிறுவி, அங்கு அரசுச் செலவில் வேதா கமப் பயிற்சிபெற்ற பார்ப்பனரை வடநாட்டிற்கு அனுப்பினான்.

சோழர் காலம் தமிழின் பொற்காலம் என்று அறிஞர் கூறு கின்றனர். அஃது உண்மைதான். அந்தக் காலத்தில் மிகப் பெருந்தமிழ்ப் புலவர்களும் உரையாசிரியர்களும் பல நூல்களை எழுதித் தமிழை மிகச் சிறந்த மொழியாய் வளர்த்தார்கள். உலக மாக்கவி கம்பரும், கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரும், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய சேக்கிழாரும் பிற புலவர் களும் சோழர் காலத்திற்குச் சிறப்பூட்டினார்கள். ஆனால், அவர்கள் பாடிய நூல்கள் பெரும்பாலும் வட நூலார் கோட்பாடுகளை ஆதரித் தவை. இதிகாச புராணக் கருத்துகளை உள்ளடக்கியவை. எனவே, சோழர் காலம் தமிழ்மொழியின் பொற்காலமேயன்றித் தமிழ்ப் பண் பாட்டின் பொற்காலமன்று. இந்த நிலை தமிழகத்தில் ஏற்படு வதற்கு இராசராசன் முதன்மைக் காரணனாய் இருந்தான். அவன் பெயரே ''ஸ்ரீராசராசன்'' தானே? இவ்வுண்மையை இரண்டாண்டு கட்குமுன் அடையாற்றில் கண்டெடுத்த செப்பு நாணயங்களிலும் காணலாம். அந்த நாணயங்களில் இராசராசன் பெயர் ''ஸ்ரீராஜ ராஜன்'' என்று நாகரி எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. அவனுடைய கல்வெட்டுகள் ''ஸ்வஸ்திஸ்ரீ'' என்று வடமொழியில் தொடங்கு கின்றன.

மிகப் பேரரசனுன இராசராசன் உயர்வு தாழ்வுகளை உடைய சமுதாய அமைப்பை வேண்டுமென்றே ஊக்குவித்தான் என்று நான் சொல்லவில்லை. அவன் வாழ்ந்த காலநிலை அவ்வாறிருந்தது. சூழ்நிலையின் குறைகளை உணர்ந்து, அந்தச் சூழ்நிலையிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டு, எட்டி நின்று அதனைப் பார்த்து, குறைகளை நீக்கி நீதியை நிலை நாட்டும் எண்ணம் எல்லாருக்கும் தோன்றுவதில்லை. ஒரு சிலரே அவ்வாற்றல் பெற்றுேர் என்பதை வரலாறு காட்டுகிறது. எடுத்துக்காட்டாக, மகாத்மா காந்தி தென்னுப்பிரிக்காவுக்குப் போகும் வரையில் வெள்ளையன் உயர்ந்த வன் என்று பிற இனத்தோர் அனைவரும் ஏற்றுக் கொண்டிருக்க வில்லையா? அது போலவே, பெரியார் சொல்கிறவரையில் பார்ப் பானைத் தம்மைக் காட்டிலும் உயர்ந்தவன் என்று தமிழகத்துப் பிற மக்கள் ஏற்றுக்கொள்ளவில்லையா? இராசராசன் சூழ்நிலையை வென்று, அதற்கு மேல் போய் நின்று பார்க்கும் ஆற்றலைப் பெற வில்லை. அவன் அன்றைக்கிருந்த சமுதாய அமைப்பு நியாயமானது என்று ஏற்றுக்கொண்டான். அவனுக்குப் பின் வந்த அரசரும் அந்நிலையை ஏற்றுக்கொண்டனர்.

வருணுசிரம தரும அடிப்படையில் பார்ப்பான் உயர்வு பெற் ருன். மற்றவர்களுக்குள் எண்ணற்ற சாதிகளும் அவற்றுள் உட் பிரிவுகளும் தோன்றி வளர்ந்தன. சில சாதியினர் கோயிலுக்குள் செல்லும் உரிமையையே இழந்தனர். அவர்கள் 'தீண்டத்தகாத வர்கள்.'' பெயரே இல்லாத ஐந்தாமவர்கள் (பஞ்சமர்கள்). கோயிலுக்குள் செல்லும் உரிமை பெற்றுேரும் ஓர் எல்லைவரையில் மட்டும் செல்லலாம். அதற்கப்பால் செல்லும் உரிமையைப் பார்ப் பனரே வைத்துக்கொண்டனர். எல்லாருக்கும் தந்தையான இறைவன் திருமுன்னரே பார்ப்பனர் உயர்ந்தோர் மற்றையோர் தாழ்ந்தோர் என்னும் அநீதி ஏற்றுக்கொள்ளப்பட்டது.

இந்திய நாடு விடுதலையடைகிற வரையில் (1947 வரையில்) பிறப்பின் அடிப்படையில் தோன்றிய உயர்வு தாழ்வு சமயத்தின் ஆதரவையும் சட்டத்தின் ஆதரவையும் பெற்றிருந்தன. இந்தக் கொடிய நிலையை எண்ணிப் பார்க்கும்போதுதான் சாதி வேற்றுமை பாராட்டாத சமண பௌத்த சமயங்கள் தமிழகத்தில் நிலைத்திருக் காமல் போய் விட்டனவே என்னும் வருத்தம் தோன்றுகிறது. (சமணம் இன்றைக்குத் தமிழகத்தில் மிகச் சிலரால் மட்டும் பின் பற்றப்படுகிறது என்பதை முன்னரே கூறியுள்ளோம்.)

எனவே, குறள் நெறி தமிழகத்துப் பொதுமக்களின் வாழ்வில் இடம் பெறவே இல்லை. அதனுல், அவர்தம் வாழ்க்கை முறை மேம்பட வழியில்லாமல் போய்விட்டது. ஆனுல், குறளின் சிறப்பை

யுணர்ந்த புலவர்கள் மட்டும் குறட் கருத்துகளையும், சொற்களையும், சொற்றொடர்களையும் தாங்கள் எழுதிய நூல்களில் சில சமயங்களில் எடுத்தாண்டார்கள். அன்றாட வாழ்வில் மக்கள் அனைவர்க்கும் வழிகாட்ட வேண்டும் என்று வள்ளுவர் எண்ணிய எண்ணம் நிறை வேறவில்லை. இந்த இருபதாம் நூற்றாண்டில்தான் பார்ப்பான் பிற மக்களைக் காட்டிலும் உயர்ந்தவன் அல்லன், அவன் வகுத்த சமுதாய முறை சுய நலத்தை அடிப்படையாய்க் கொண்டது, அதனால் மிகப் பெரும்பாலான மக்கள் பல கொடுமைகளுக்கும் இழிவுகளுக்கும் ஆளானார்கள் என்பன போன்ற உண்மைகள் தமிழ்மக்கள் மனத்தில் தோன்றத் தொடங்கின. இப்போது இவ்வெண்ணம் வலிமைபெற்று வருகிறது. இந்தப் பெரும் புரட்சிக்குப் பெரியாரும் மறைமலையடி களும் போன்ற தமிழ்ச் சிந்தனையாளர்கள் வழி வகுத்தார்கள். ஆங்கிலக் கல்வியும் இப் புரட்சிக்குப் பெரிதும் உதவியது.

இப்போது அரசும் மக்கள் மனத்தை அறிந்து வள்ளுவருக்குப் பல சிறப்புகளைச் செய்கிறது. வள்ளுவர் கோட்டம் அவற்றுள் ஒன்று. மிக விரைவில் குறள்நெறி பரப்பும் மையம் ஒன்றும் ஏற்பட இருக்கிறது. இனிமேல் தமிழனிடம் தாழ்வு மனப்பான்மை காணப் பட்டால், அஃது அவனுடைய தவறான சமய உணர்ச்சியால் ஏற்பட்ட தாகத்தான் இருக்கும். படித்த மக்களின் தொகை இப்போது பெருகிக்கொண்டே வருகிறது. அதனால், அன்பையும் அறிவையும் அடிப்படையாய்க் கொண்ட வாழ்க்கை முறையை விளக்கும் குறளறத்தைப் புலவர்கள் மட்டுமன்றிப் பொதுமக்களும் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு இனிமேல் பெருகும் என்று எதிர் பார்க்கலாம்.

---

## மாற்றம் தேவை

'நம்மால் என்ன செய்ய முடியும்' என்ற சோர்வு மனப் பான்மை ஒரு நாட்டு மக்களிடையே வளர்ந்தால் அந்த நாட்டில் வலியோனாட்சி ஏற்படுவது எளிது! இந்த அரசியலில் நம் ஊரைப் பொறுத்த அளவில் என்னால் இன்னது செய்யமுடியும் என்ற தன்னம்பிக்கை ஒவ்வொருவருக்கும் இருந்தால் வலி யோன் ஆட்சி வராமல் தடுக்க முடியும். அதற்குத் தேர்தல் முறையே மாறி அமையவேண்டும். சிறு சிறு தொகுதிகளாகத் தேர்தல் புதுமுறையில் நடைபெற வேண்டும்.

—டாக்டர் மு. வரதராசனார்.

(மண்ணின் மதிப்பு. பக். 211)

# எண்மர் எண்மணி மாலை

[மருத்துவர் மறையரசன்]

(முன் இதழ் ௧௫௦ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**6.1. வீரமாமுனிவர் :**

(வெண்பா)

என்னுள் விளக்கத்தை ஏற்றித் தரவல்ல
தென்னூல் எனவறியோம்! என்றதனால்—தொன்னூல்
விளக்க வருந்தலைவ! விஞ்ச வளத்தமிழை
வளர்க்க வருந்தலைவ! வாழ்.

**6.2. பரிதிமாற் கலைஞர் :**

(அகவல்)

வாழ்ந்த தனித்தமிழ் உருவாய் நீவிர்
ஆழ்ந்த படிப்பொடும்—ஆய்வொடும் கண்டு
நிறுத்திய அடித்தளம் நிலைத்திட மேலே
திருத்தமாய் எழும்புந் தனித்தமிழ் மாளிகை;
தனிப்பா சுரத்தொகை தந்தனை எல்லாம்
இனிப்பாய் நெஞ்சில் இடத்தைப் பிடிக்கும்;
தனித்தமிழ் வாழத் தகையெனத் தந்து
தனித்துஅமிழ் என்றே தடுப்போர் வெட்டிச்
சாய்ந்திடுஞ் சூறைக் காற்றே
ஓய்ச்சல் ஏதுள தனித்தமிழ்ப் புயற்கே!

**6.3. மறைமலையடிகள் :**

(கட்டளைக் கலித்துறை)

புயலாய் எழுந்து புதினம் புனைந்து புதுமைவினை
வயலாய்க் கடிதம் வரைந்தோய் குமுதமாம் வல்லியெனும்
கயலாள் விழியளே நல்லா னெனுமொரு கள்வனது
செயலால் படுதுயர் சீராய்ப் படைத்துச் சிறந்தவனே.

6.4. பாவேந்தர் :

(வஞ்சி விருத்தம்)

சிறப்பாயிசை யமுதைத்தரும்
இசையும்பொரு ளோடே!
மறுப்பைச்சொல உளரோஎவர்
இரணியன்கதைக் கீடே!
பிறப்பால்நனி தமிழ்ப்பாண்டியன்
பரிசைத்தரும் முத்தே
இறப்பேயிலை நிலைக்கும்எதிர்
பாராதநல் முத்தம்.

6.5. பாவாணர் :

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

முத்துக் கடலிடை மூழ்கித் திளைத்தனை;
முதற்றாய் மொழியிதும் ஈத்தனை;
மொத்தச் சிறப்பென மொழித்த ஒப்பியல்
மொழிநூல் நிலைத்திடப் புரிந்தனை;
தத்தம் எடுத்தனை தமிழர் திருமணம்;
தத்தனை திராவிடத் தாயினை;
கொத்தும் நிறைவோடு தமிழர் மதமதும்
கொடுத்தனை வாழ்கசெந் தமிழுமே!

6.6. வ. சுப்பையா (பிள்ளை) :

(மருட்பா)

செந்தமிழ்ச் செல்வியைச் சீராய் வளர்த்தெடுக்கும்
செந்தமிழ்ச் செல்வராம் சுப்பையா — அந்தச்
சிலம்பின் பரல்கள் சிதறி யுன்பேர்
புலம்பும்; அதிரும்; புகழும்;
நலம்பல போற்றி நன்றியும் சொலுமே!

6.7. பண்ணாய்வாளர் :

(சிந்து)

நன்றிசொலத் தேவையில்லை
நாலுகாசுத் தேவையில்லை — தமிழிசை
குன்றுதடா கலப்பிசையால் தம்பி — உள்ளம்
குமுறுதடா குமுறுதடா வெம்பி.

சிக்குடைய வடவிசைக்கும்
சிலிர்த்தெழுந்த தெலுங்கிசைக்கும் தமிழிசை
துக்கடாவாய்ப் போனதடா தம்பி—நெஞ்சு
துடிக்குதடா துடிக்குதடா வெம்பி.

தமிழிசையும் தேய்ந்ததனல்
தனைமறந்து ஆய்ந்ததனல்—தமிழிசை
நிமிருடா சுந்தரனுல் நம்பி—நெஞ்சு
நிறையுதடா நிறையுதடா தும்பி.

ஆய்வுகளை முறைப்படுத்தி
அடுத்தானிசை சிறைப்படுத்தி—தமிழிசை
வேய்த்திடுவோம் வெற்றியடா தம்பி—நாளும்
விரைத்திசைப்பாய் தனித்தமிழில் தும்பி.

## 6.8. பாவல ரேறு :

(கலி வெண்பா)

தும்பிகளைப் பள்ளிப் பறவைகளைக் கூப்பிட்டுத்
தம்பிகளே வெற்றித் தடஞ்சேரத்—தெம்புடனே

ஒன்ருகிப் போரிடுவோம் உள்ள உணர்வென்றும்
குன்ருது போரிடுவோம் என்றழைத்து—நன்ருய்த்

தமிழின் நலம்பேண தன்னினத்தின், இன்பம்
கமழ்தரும் பெண்கள் நலமும்—உமிழாது

பேணும் வகையாய் இளமுளத்தில் பேரியக்கம்
தேனுய்த் தமிழ்சிட்டில் தத்திடுவோன்—கோனுகி

சிந்தும் சுவைச்சித்தும் சத்தம் நிறைபாவும்
தந்து புகழ்கொள்ளும் மாணிக்கம்—செந்தமிழின்

சீர்நாட்டை ஆண்டுவிடும் எண்ணத்தால் மாற்ருர்மேல்
போர்நடத்தும் பாவலரின் ஏறுத்தான்—பேர்கேட்டே

ஓடிவரும் கூட்டம் உணர்வென்றும் கூட்டாக
ஆடி அவன்பெயரை ஆர்ப்பரிக்கும்—நாடி

கூண்டோடு பின்பற்றும் பின்னென்ன நாடுய்யப்
பூண்டான் அழியாப் பெயர்.

———

# "தமிழின் நீர்மை"

[திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.]

(முன் இதழ் கசுச ஆம் பக்கத் தொடர்ச்சி)

(8) தமிழ் எழுத்துகள், அவை தோன்றும் நெறிக்கு ஏற்ப அறிவார்ந்த முறையில் ஒழுங்குற வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. அவ்வரிசை முறைக்குரிய காரணங்களை உரையாசிரியர்கள் செவ்விதின் விளக்கியுள்ளனர். ஆனால் ஆங்கிலம் முதலிய மொழிகளில் ABCDE என வழங்கும் வரிசை முறைக்குரிய காரணம், ஏதும் இருப்பதாகப் புலப்படுத்தப் பெறவில்லை.

(9) தமிழிலுள்ள சொற்கள் எல்லாம் இயல்பாக மிகக்குறுகியனவாய், ஓரசை ஈரசைகளாலேயே பெரும்பாலும் இயன்றுள்ளன. 'நாகரிகம் எய்தப்பெறாத எளிய மக்கள் பேசும் மொழியின் சொற்கள், அவர்கள் கையாளும் கருவிகளைப் போலவே திருத்தமும் செம்மையும் பெறாமல், மிக நீளமாக இருக்கும்' என்பது மொழிநூல் அறிஞர்கள் கண்டறிந்த உண்மையாகலின், தமிழில் வழங்கும் சிறுசிறு சொல்லமைப்பே அதன் பழம்பெரு நாகரிகத்தினையும் பண்பாட்டினையும் அறிவிக்கும் சான்றாக அமையும்.

(10) தமிழிற் பகுத்தறிவுடைய மக்களை உயர்திணை என்றும், பகுத்தறிவில்லாத உயிரையும் உயிரில் பொருள்களையும் அஃறிணை என்றும், பாகுபாடு செய்து விளக்கியிருப்பது பாராட்டற்குரியதாகும்.

(11) அங்ஙனமே சொல் நோக்கி ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும், இரண்டையும் அலியாகவும் மனஞ்சென்றவாறு, செயற்கைப் போலி நெறியிற் கூறியொழிந்து பிழைபடாமல், பொருள் நோக்கி இயற்கைக்கு ஏற்பத் தமிழிற் பால்கள் (gender) வகுக்கப்பட்டுள்ளமையும், மிகவும் மகிழ்தற்குரிய செய்தியாகும்.

(12) தமிழில் உள்ள படர்க்கை வினைமுற்றுச் சொற்கள், திணை பால் எண் இடம் காலம் என்பவற்றைக் காட்ட வல்லனவாக விளங்குதல்போல, வேறு சில மொழிகளிற் காண்டல் அரிது. ஒரு சில மொழிகளில் பெயர்ச்சொற்கள் மட்டுமேயன்றிப் பெயர்களைத் தழுவி வரும் உரிச்சொற்களும்கூட, வேற்றுமை யுருபுகள் ஏற்பதுண்டு. அத்தகைய இடர்ப்பாடுகள் தமிழில் இல்லாமை கற்பார்க்கு எளிமை பயக்கின்றது.

(13) தமிழ்ச் சொற்களின் பகுதி விகுதி முதலிய உறுப்புகள், மிக எளியவரும் தாமே கருதியுணர்ந்துகொள்ளத் தக்க இயல்புடையன. பிற சில மொழிகளிற்போலச் செயற்கை நெறி களிலும், வெறும் கற்பனை முறைகளிலும், சொற்களின் பகுதி விகுதிகள் தமிழில் வகுக்கப்பட்டில்லாமை, அறிவு வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிகின்றது.

(14) 'பன்னீ ருயிரும் கசதந பமவய
ஞங ஈரைந்து உயிர் மெய்யும் மொழி முதல்'

எனச் சொற்களின் முதலில் வருவன 22 எழுத்துகளே எனவும்,

'ஆவி ஞணநமன யரலவழள மெய்
சாயும் உகரம் நாலாறும் ஈறே'

எனச் சொற்களின் இறுதியில் வருவன 24 எழுத்துகளே எனவும் பிறவாறும், தமிழிலக்கணம் ஆராய்ந்து அளந்து கூறி யிருப்பது, மிகவும் வியக்கத்தக்க செய்தியாகும்.

(15) ஆசிரியர் சிவஞான சுவாமிகள் தமது 'தொல்காப்பியப் பாயிர விருத்தி'யில் 'தமிழ் மொழிப் புணர்ச்சிக்கட் படுஞ் செய்கை களும், குறியீடுகளும், வினைக்குறிப்பு வினைத்தொகை முதலிய சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகு பாடுகளும், அகம் புறம் என்னும் பொருட் பாகுபாடுகளும், குறிஞ்சி, வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும், இன்னோரன்ன பிறவும் வட மொழியிற் பெறப்படா' எனக் கூறியிருப்பது ஈண்டுக் குறிக்கொள் ளத்தக்கது.

(16) நன்னூல் இயற்றிய ஆசிரியர் பவணந்தியார் இடுகுறிப் பெயர் உடன்பட்டனராயினும், 'மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்று' எனவும், 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' எனவும் ஆசிரியர் தொல்காப்பியர் அருளிச் செய்திருத்தலின், தமிழில் எல்லாச் சொற்களும் அறிவார்ந்த முறையிற் காரணம் பற்றி அமைந்தனவே என்பது அறியப்படும், 'ஆசிரியர் தொல் காப்பியனுர் யாதானும் ஓர் காரணம் பற்றியே குறியிட்டு ஆளுதல் அல்லது, பிற சில மொழியாளர் போலக் காரணம் பற்றுதும் குறி யிட்டு ஆளுதல் யாண்டும் இல்லை' எனச் சிவஞானசுவாமிகள், தமது 'தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி'யிற் குறித்திருப்பதும் ஈண்டு நாம் உணர்தற்கு ஏற்புடையது.

(17) ஏனைய மொழிகள் எல்லாம் எழுத்து சொல் சொற்றொடர் செய்யுள் என்பன போன்றவற்றிற்கு மட்டுமே, ஓரளவு இலக்கணம் உடையனவாக, அவற்றாற் குறிக்கப்படும் பொருளுக்கும் கூடத், தமிழ்மொழி இலக்கணம் வகுத்திருக்கின்றது. 'பொருள் இலக்கணம்' என்பது தமிழ்மொழியில் மட்டுமே உள்ள சிறப்புக்கூறு ஆகும். அது பற்றியேயன்றோ, ''தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழ்'' எனத் தமிழ் மொழியினைச் சான்றோர்கள் போற்றுவாராயினர் என்பது.

'வழுத்துபெரு மாண்புடைய மற்றை மொழிகள்
எழுத்தொடு சொல்லின் இயல்பே—முழுத்தும்
எடுத்துரைக்க மாட்டா தினைப்பப், பொருளும்
தொடுத்துரைக்கும் தூய தமிழ்'

—ந. ரா. மு.

(18) மக்களின் வாழ்க்கையை அகம் புறம் என இரண்டாக வகுத்து, மக்களாயினோர் தம் வாழ்க்கையில் இன்றியமையாது எய்தற்பாலனவாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்பனவற்றையும், அவற்றோடு தொடர்புடைய காதல் வீரம் முதலிய பற்பல செய்திகளையும் எல்லாம், 'புலநெறி வழக்கம்' பற்றி மிகவும் விரிவாக விளக்கிக் கூறியிருப்பது தமிழிலக்கணத்தின் தனிப்பெரும் சிறப்பியல்புகளுளெல்லாம் தலைசிறந்த தொன்றாகும்.

(19) உலகத்திற் பல மொழிகள் காலத்திற்குக் காலம் சிதைந்து திரிந்து மாறுபடுகின்றன. போவுல்ப் கேடிமான் காலத்தில் வழங்கிய ஆங்கிலமொழி, சாசர் காலத்திலும், சாசர் காலத்திய மொழி செகப்பிரியர் காலத்திலும், செகப்பிரியர் காலத்து மொழி தேனிசையன் காலத்திலும், எத்தனை எத்தனையோ மாறுதல்களை அடைந்துள்ளன.[6]

ஆனால் தமிழ்மொழியானது, கடந்த இரண்டாயிரம் மூவாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகவே மாறாமலும், சிதையாமலும், ஒரே நிலையிற் கன்னித்தமிழ் என்பதற்கு ஏற்ப, இன்றும் யாவர்க்கும் எளிதிற் புரியும்படியாக ஒரு சிறிதும் மாறாமல், நிலைபெற்று நிலவி

---

(6) Just compare the language of Caedmon, of Langland of Chaucer, of Shakespeare, of Milton and of Tennyson, one with the other, and see to what great an extent the language of one poet differs from that of the other.

—Maraimalai Adigalar

வருகின்றது. உலக மொழிகளின் வரலாற்றில், இஃதொரு விந்தை மிக்க பெருஞ்செய்தியாகும்.[7]

(20) ஆங்கிலம் உலகப் பெருமொழிகளுள் ஒன்றாக இன்று திகழ்கின்றதெனினும், அதன் இலக்கணம் இன்னும் போதிய திருத்தமும் செம்மையும் எய்தவில்லை என, ஜார்ஜ் பெர்னார்ட்ஷா முதலிய ஆங்கில அறிஞர்கள் பலர் கூறி வருகின்றனர். ஆனால் ஏறத்தாழ மூவாயிரம் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, தமிழில் தொல்காப்பியம் என்னும் தூய சிறந்த முழுமுதல் இலக்கணநூல் அமைந்திருப்பது, தமிழ் மக்களின் தவப்பேறு என்றே கூறுதல் வேண்டும்.

முடிவுரை

பழந்தமிழ் மக்கள் கண்டுணர்ந்து கடைப்பிடித்த நூற்பா அமைப்பு, சுருங்கச் சொல்லல்—விளங்கவைத்தல்—நவின்றோர்க்கினிமை—நன்மொழிபுணர்த்தல்—ஓசையுடைமை— ஆழமுடைத்தாதல் முதலிய பத்துவகை அழகுகளும் பயின்று, எத்துணை மாட்சிமை மிக்கு இலங்குகின்றது! நூற்பாக்களைக் காரண காரியமுறை பிறழாமலும், முன்னொடு பின் முரணாமலும், பிறவாறும் அமைத்திருக்கும் திறமும், அவற்றிற்கு **இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர்** முதலானோர் வரைந்திருக்கும் அரிய பெரிய உரை விளக்கங்களும் பிறவுமெல்லாம், நினைத்தொறும் நினைத்தொறும் வியப்பும் விம்மிதமும் விளைக்கவல்லன அன்றோ?

சுருங்கக் கூறலுறின், தமிழிலக்கண அமைப்பினை ஆராய்வதொன்றே, தமிழ் மக்களின் அறிவாராய்ச்சித் திறனையும், நாகரிக மேம்பாடுகளையும், அளந்தறிந்துணர்ந்து கொள்ளுதற்குப், போதிய எளிய இனிய உறுபெரும் கருவியாகும் எனலாம்.

(வெண்பா)

மொழிகள் பலப்பலதாம் மூதுலகில் உண்டு !
இழிவின் றவையுயர்ந்த வேனும்—விழுமியநம்
செந்தமிழ்போல் தெய்வத் திறம்சிறந்த சீர்த்தி, மற்றை
எந்தமொழிக் கேனும்உண் டோ ? ஈண்டு

—ந. ரா. மு.

---

(7) The Tamil words that are more than seven thousand years old have not undergone any change in the mouths of the latter. The sacred kural written two thousand years ago, is intelligible even now to an illiterate rustic. Does not this indicate the great Vitality of Tamil?

—Maraimalai Adigalar

———

# தமிழ்ப் பொங்கல் வாழி!

[தெ. முருகசாமி
முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி]

மங்கலம் மணக்கச் செய்யும்
மனையெலாம் மகிழ்வு தோன்ற
தங்கும்நல் லின்பத் தாலே
தகவிலாப் பழைமை மாற
பொங்குநீர்க் கழனி யெல்லாம்
பொலிந்தநல் விளைச்ச லாலே
வங்கம்போல் வளமை காட்டும்
வண்டமிழ்ப் பொங்கல் வாழி! 1

விண்வெளி ஆயும் போதும்
விளைச்சலில் கவனம் வேண்டும்
கண்ணெளித் தமிழைக் காக்கும்
கருத்திலும் கொள்கை வேண்டும்,
எண்ணமும் ஏற்றங் கொள்ள
எங்குள தமிழர்க் கெல்லாம்
மண்வளம் காக்க வந்த
மாண்புறு பொங்கல் வாழி! 2

இடரிலா உரிமை பெற்ற
இனியதமிழ் மக்கள் போலப்
படரிலா வாழ்வைத் தந்து,
பாருள மக்கட் கெல்லாம்
கடமையை உணர்த்திக் காட்டிக்
கதிரவன் முன்னர்ப் பனியாய்
மடமையை எரிக்க வந்த
மாத்தமிழ்ப் பொங்கல் வாழி! 3

கரும்பொடு மஞ்சள் இஞ்சி
கணக்கின்றி விளைந்து காட்டில்
பொருள்வளம் கூட்ட வந்த
புகழுடைத் தைமா தத்தில்
அருள்வளம் செழிக்கச் செய்யும்
செந்தமிழ்ச் செல்வி யாலே
இருளினை விலக்க வந்த
இன்தமிழ்ப் பொங்கல் வாழி! 4

———

# பாவாணரும் மான்குட்டியும்

[தொகுப்பு : இரா. இளங்குமரன்]

மொழிஞாயிறு பாவாணர் பிணைமான்குட்டி ஒன்று வளர்த்தார் என்பதும் அதற்குக் கலைமான் குட்டி ஒன்று வாங்கி இணைக்க விரும்பினார் என்பதும் வியப்பான செய்திகள் ஆகலாம். ஆனால், அவர் கடிதங்களின் வழியே இவை தெளிவாகின்றன.

பாவாணர் எழுதிய கடிதங்களில் வியப்பானதும் வேறொரு வகையால் அறிந்துகொள்ள இயலாததும் அவர்தம் உணர்வைப் படம்பிடித்துக் காட்டுவனவும் ஆகிய செய்திகள் பலப்பல உள்ளன. அவற்றின் தொகுப்பாகப் 'பாவாணர் கடிதங்கள்' என்னும் பெயரிய நூல் ஒன்று அணித்தே கழகவழி வெளிவர உள்ளது. அதிலுள்ள 'மான்குட்டிச்' செய்தி இது :

பாவாணருக்கு ஆர்வலரும், அணுக்கத் தொண்டரும், நூல் விற்பனையில் உதவியாளருமாக இருந்தவர் சேலம் அரிமாப்புலவர் திரு. மி.மு. சின்னாண்டார். சின்னச்சாமியாக இருந்தவரைச் சின்னாண்டார் ஆக்கியவரே பாவாணர் என்பது குறிப்பிடத்தக்கது. அவருக்கு, 29—6—64இல் ''ஏத்தாப்பூரிலாவது ஆற்றூரிலாவது புள்ளிமான்குட்டி விலைக்குக் கிடைக்குமா'' என வினாவி எழுதினார். பின்னர் அவரே ஒரு கலைக்குட்டி வாங்கிக் கொணர்ந்த செய்தியை 25—7—64இல் எழுதுகின்றார் பாவாணர். அவர் காட்டுப்பாடியில் இருந்தபோது எழுதியவை இவை: ''சேலத்தில் இருந்து அரூர் வந்து அன்று இருபுலவருடன் கோட்டப்பட்டி சென்று இராத்தங்கி, மறுநாட்காலையில் புள்ளிமான் கலைக்குட்டி 100 உருபாவிற்கு வாங்கிக்கொண்டு அரூர் திரும்பினோம். அன்னையார் இறந்ததினாலும் இன்னும் மணமாகாமையாலும் வேறுதுணையின்மையாலும் மகள் ஆறுதலடைதற் பொருட்டே அவள் அவாவியவாறு அத்துணை விலைகொடுத்து அதனை வாங்க நேர்ந்தது. மேலும், அவளுக்குரிய வீணையை 150 உருபாவிற்கு விற்றுத்தான் அதனை வாங்கினோம். குட்டி இற்றை நிலைமையில் அவ்விலை பெறும். ஆயினும் 50 உருபாவிற்கும் வேறிடத்தில் வாங்கலாம்.

''குட்டியைப் பேரியங்கியில் ஒருவரும் ஏற்ற இசையாமையால் மொரப்பூர் சென்று புகைவண்டியில் ஏற்ற விரும்பினோம். ஆயின் குட்டி புதிய ஆட்களைக்கண்டு மருண்டு முரண்டு பண்ணியதால், புகைவண்டிக்கூண்டில் அடைப்பது சேதத்திற்கிடமாம் என்று ஒருவர் தவறாய்ச் சொல்லிவிட்டார். அதை நம்பி தி. வி. எசுவில்

(T. V. S) அனுப்புமாறு சீநிவாசன் இராசேந்திரன் என்னும் இரு புலவரிடமும் சொல்லிவிட்டு இங்கு வந்தேன்.

"தி. வி. எசு.வில் உயிரிகளைக் கடத்துவதில்லையென்று அறிந்ததினாலும் என்மகள் உடனே கொண்டுவர விரும்பியதாலும் மறுநாளே அரூர் சென்று அடுத்த நாட்காலை அவ்விரு புலவருடனும் ஒரு மாணவருடனும் மொரப்பூர் கொண்டுபோய் நண்பகல் இணைப்பு விரைவானில் (Link Express) ஏற்றிவிட்டோம். மாணவர் என்னுடன் இங்குத் துணைக்கு வந்து திரும்பினார்.

"மான் நன்றாய்ப் பழகியிருக்கிறது. ஆயின் ஒரு புள்ளிமான் பிணைக்குட்டி வேண்டும். இல்லாக்கால், கலைக்குட்டி பெரிதானவுடன் மலைநாடலாம். உடனே தாங்கள் ஏத்தாப்பூர் நண்பருக்கெழுதிக் கேட்க, ஆற்றூர்ச்சந்தைக்கு மான்குட்டி விற்பனைக்கு வருமென்று சேலத்தில் இருந்தபோது கேள்விப்பட்டேன். அங்கு வராவிடினும் அப்பக்கம் யாரும் வளர்த்து விற்கலாம். மும்மாதக் குட்டியாயிருப்பது நல்லது. ஆறுமாதமாயினும் குற்றமின்று. 25 முதல் 50 உருபாவரை தரலாம். அரூர்ப்பக்கம் இப்போது ஒருவரிடத்துமில்லை" என்று எழுதினார்.

'புள்ளிமான்குட்டி' எனப் பொதுவாகக் கேட்ட பாவாணர் கலைக்குட்டி வாங்கிவிட்டமையால் பிணைக்குட்டி வேண்டுமெனப் பின்னர் எழுதுகின்றார்.

"புள்ளிமான் பிணைக்குட்டி கிடைத்தவுடன் தெரிவிக்க" என்பது 7—10—64 ஆம் பக்கல் கடிதக்குறிப்பு.

"புள்ளிமான் பிணைக்குட்டி கிடைத்ததா?" என வினவுதல் 24—11—64 ஆம் பக்கல் கடிதத்துக் காணப்படுகின்றது.

பிணைக்குட்டி முயன்றும் கிடையாமையால் 5—12—64இல் தமிழ்ப்பாவை ஆசிரியர் திரு அருளனார் (கருணைதாசன்) அவர்களுக்குப் பாவாணர் "என்னிடம் ஒரு புள்ளிமான் கலை இருக்கின்றது. அதை 150 அல்லது 100 உருபாவிற்கு வாங்குவார் யாரேனும் ஆங்குண்டா?" என்று வினவி எழுதுகின்றார்.

கலையைப் பிணையுடன் இணைத்தாரா? விற்றாரா? என்பது அறியக் கூடவில்லை. அவர்தம் கடிதங்களின் வழியே அறியப்படும் செய்திகள் இவை.

மகளின் தனிமைக்கு இரங்கியருளிய உள்ளத்துள் கலைமான் தனிமைக்கும் வருந்தியிரங்கியருளும் பான்மையும் ஒளிந்திருத்தல் பாவாணரைக் காட்டுகின்றதன்றோ!

———

# தொல்காப்பியத்தில் மரஞ்செடிகொடிப் பெயர்கள்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரத்தில் சில செடிகொடி மரங்கள் கூறப்பட்டுள்ளன. இவைகள் அறிவியற்படி எவை என்பதை ஆராய்ந்து கண்டுகொள்ளவேண்டும். தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய சில பெயர்கள் சங்க நூல்களில் வழங்கியுள்ளன. உரையாசிரியர்களும் பொருள் கூறியுள்ளனர். மிகப் பிற்கால உரையாசிரியர்கள் கூறிய பொருள் விளக்கத்தில் சில மயக்கப்பொருளைத் தருகின்றன. சில பெயர்கள் இன்றும் நாட்டுப்புற மக்களிடம் வழங்குகின்றன. தொல்காப்பியத்தில் வந்துள்ள பெயர்கள் என்ன பொருளைத் தருகின்றன என்று கண்டு அவற்றின் அறிவியற் பெயர்களைச் சுட்டிக் காட்டுவோம்.

**யா:**

> "யாமரக் கிளவியும் பிடாவுந் தளாவும்
> ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே"

என்று எழுத்ததிகாரத்தில் 230ஆம் சூத்திரத்தில் யா என்ற மரமும், பிடாவும் தளாவும் கூறப்பட்டுள்ளன. யா என்ற மரம் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள மரமாகும். நீடுநிலை யா (அகம் 3) நெடுநிலை யா (அகம் 59; நற்றிணை 186) நெடுந்தாள் யா (அகம் 193) என்று அழைக்கப்பட்டுள்ளது. இந்த மரத்தை 'ஆ' என்றும் ஆச்சாவென்றும் நிகண்டுகள் கூறியுள்ளன. இதை ஆச்சா என்று இக்காலத்தில் அழைப்பர். செங்நிலை யா (அகம் 33) கருங்கால் யா (அகம் 391) என்று அம் மரம் குறிப்பிடப்பட்டுள்ளது. இம் மரத்தின் இலையை கவையொண் டளிர் (அகம் 59) கவைமுறி (அகம் 35, 357) என்று விளக்கியிருப்பதால் இந்த மரம் எதுவென்பதைக் கானியல் வல்லுநர் (Foresters எளிதாக உணர்ந்துகொள்வர். மந்தாரையின் இலையும் கவைத்து இருக்கும். ஆனால் ஆச்சாவின் இலை நன்றாகக் கவைத்துப் பிரிந்திருக்கும் என்று கூறுவர். (The leaves of Hardwickia Binata are somewhat like those of Bauhinia but the two leaflets are distinct—N. L. Bor, A Manual of Forest Botany). இந்த மரத்தின் கொழுந்திலைகள் அரக்கை விதிர்த்தாற்போல் சிவந்த புள்ளிகளையுடையன என்று

அகநானூறு (133) கூறுவதும் உண்மையே. குறுந்தொகையில் (255) யானை தன் கோட்டால் இந்த மரத்தைக் குத்தி உணவைப் பெறுகின்றது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் அடிமரத்தைக் குத்தினால் நான்கிலிருந்து பதினாறு கேலன்கள் (Gallons) வரை ஒருவகை எண்ணெய் தரும் என்று கூறியுள்ளனர். இதையே யானையுண்டதைக் குறுந்தொகைப் பாடல் கூறுகின்றது என்பது தெளிவாகும். இதுவரை கூறிய செய்திகளிலிருந்து அறிவியற்படி தொல்காப்பியமும் சங்கநூல்களும் கூறிய யா என்ற மரம் ஆச்சாவே என்பது தெரிகின்றது. இந்த மரத்தை அறிவியலில் (Hardwickia binata) என்றழைப்பர். சென்னைப் பல்கலைக் கழக அகராதியிலும் கலைக்களஞ்சியத்திலும் சாலமரம் (Shorea Robusta) என்று பொருள் கூறியுள்ளது முற்றிலும் தவறாகும். சாலமரம் தமிழ்நாட்டில் இயற்கையில் வளர்வதில்லை.

**பிடா :**

பிடா என்ற செடி தற்காலத்தில் குட்டிப்பிடவம் என்றழைக்கப் படுகின்றது. புடன் என்றும் அழைக்கப்படுகின்றது. இதைச் சங்க நூல்கள் (அகம் 23, 34 கலித்தொகை 101, முல்லைப்பாட்டு 24) கூறியுள்ளன. முல்லைப் பாட்டில் இதன் நறுமணமிக்க பூ கூறப்பட்டுள்ளது. கலித்தொகையில் இதன் பூ மாலையில் மலரும் என்று கூறியுள்ளது. இந்தச் செடி அறிவியலில் Randia Malabarica என்பதாகும். சென்னைப் பல்கலைக் கழக அகராதி இதைச் சரிவரக் கூறியுள்ளது.

**தளா :**

இதைச் செம்முல்லை என்று உரை கூறினவர்கள் சொல்லியுள்ளனர். முல்லையில் ஒருவகை சிறிது சிவந்த பூவைக் கொண்டிருக்கும். இந்தச் செம்முல்லையின் அரும்பு ஐங்குறுநூற்றிலும் நற்றிணையிலும் மீன்கொத்தியின் செந்நிற அலகுக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. கவுதாரியின் கால்விரல் முள்ளுக்கும் இதன் பூ ஒப்பிடப் பட்டுள்ளது. இதை அறிவியலில் Jasminum humilis என்றழைப்பர்.

**மா :**

“மாமரக் கிளவியும் ஆவும் மாவும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன
அகரம் வல்லெழுத் தவையவண் நிலையா
னகரம் ஒற்றும் ஆவும் மாவும்”

என்று 132ஆம் சூத்திரத்தில் மா மரத்தைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதை யாவரும் தெரிந்திருப்பதால் இதற்கு விளக்கம் தேவையில்லை. இதை Mangifera Indica என்று அறிவியலில் அழைப்பர். இதன் ஆங்கிலப் பெயர் தமிழிலிருந்து வந்ததாகும்.

**உதி :**

''உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே''

என்று 244ஆம் சூத்திரத்தில் உதி மரத்தைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. இப்பொழுது இம்மரம் ஓதியம் என்று அழைக்கப்படுகின்றது. பிற்கால இலக்கண நூல்களில் ஓதி என்ருல் மகளிரின் கூந்தல் என்றும் அதுவே ஒதி என்று வழங்கினுல் ஒரு மரத்தைக் குறிக்கும் என்றும் கூறியுள்ளன. இந்த மரம் தெரிந்த மரமாதலால் இதற்கு விளக்கம் வேண்டுவதில்லை. ஒதியமரம்போல் பருத்துவிட்டான் என்று வழக்கு கூறுவதுண்டு. இதை அறிவியலில் Odina wodier என்றழைப்பர்.

**புளி :**

''புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை''

என்று 245ஆம் சூத்திரத்தில் புளிமரத்தைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. சங்க நூல்களில் சில பாடல்களில் பொதுவாக புளிச்சுவையுடைய பழங்களையுடைய மரங்களைப் புளி என்று குறிப்பிட்டிருக்கின்றன. ஆனுல் மலைபடுகடாம் (178—182) நற்றிணை (374) ஆகியவைகள் இக்காலத்தில் பழக்கமாக வழங்கும் புளிய மரத்தையே குறித்திருக்கின்றது. புளியமரம் ஆப்பிரிக்காவிலிருந்து வந்ததென்று அறிவியலார் கூறுவர். ஆயினும் அது சங்ககாலத்திற்கு மிக முன்னரே வந்துவிட்டது என்பதை உணரவேண்டும். அறிஞர் எம். கிருஷ்ணன் அவர்கள் கூறுவதுபோல மிகப் பிற்பட்ட காலத்தில்தான் புளியமரம் இந்தியாவிற்கு வந்தது என்பது தவருகும். புளியமரத்தை அறிவியலில் Tamarindus Indica என்றழைப்பர்.

**ஒடு :**

"ஒடுமரக் கிளவி யுதிமர இயற்றே"

என்று 263ஆம் சூத்திரத்தில் ஒடுமரம்பற்றிக் கூறப்பட்டுள்ளது. சங்க நூல்களில் ஒரே ஒரு பாடலில் மட்டும் (புறம் 325) ஒடு கூறப்பட்டிருப்பதால் இதைக் கண்டுபிடிப்பது எளிதாக இல்லை. 'உடுப்பிழுதறுத்த ஒடுங்காழ் படலை' என்று வரும் வரியில் ஒடுமரம் வேலி

யாகப் பயன்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. இந்த மரம் இன்றும் தமிழ்நாட்டில் சில பகுதிகளில் வேலியாக வளர்க்கப்படுகின்றது. இந்த மரத்தை வேலிக்குப் பயன்படுத்திய காரணத்தை N. L. Bor என்ற கானியலறிஞர் கூறியுள்ளார், இந்த மரத்தைக் கறையான்கள் அழிப்பதில்லை. (This small tree in more at home in dry districts. The wood is durable and is prized for house-post, fences etc as it is not attacked on afflicted of white ants.) கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக ஒடுமரம் வேலிக்குப் பயன்பட்டு வந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இதற்கு நச்சுத்தன்மையுடைய இலையுள்ளமையால் விலங்குகள் உண்பதில்லை. தமிழ்நாட்டில் சில விடங்களில் ஒடுவை என்றும் ஒடுப்பை அல்லது ஒடுவம் என்றும் அழைத்து வருகின்றனர். இது உருண்டை வடிவமான உலர்கனியை உடையது. இது முதிர்ந்த போது ஓசையுடன் வெடிக்கும். ஒடுவை அறிவியலில் Cleistanthus Communis என்றழைப்பர்.

சே :

"சேஎன் மரப்பெயர் ஒடுமர இயற்றே"

என்று 279ஆம் சூத்திரத்தில் சே என்ற மரத்தைப்பற்றிக் கூறப் பட்டுள்ளது. இதைச் சங்கநூல்கள் விளக்கவில்லை. பிற்காலத்திய நிகண்டுகளான திவாகரம், பிங்கலந்தை ஆகியவற்றில் 'சே' என்பதற்கு அழிஞ்சில் என்று பொருள் கூறப்பட்டுள்ளது, இதன் வைரம் பாய்ந்த உள்பகுதி உறுதியானதாகையால் உலக்கை, தூண்கள், சீப்புகள் ஆகியவற்றிற்குப் பயன்படுத்தினர். இதை அறிவியலில் Alangium salvifolium என்றழைத்தனர்.

ஞெமை :

"விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்
அவைமுப் பெயருஞ் சேமர இயல"

என்று 283ஆம் சூத்திரம் கூறியுள்ளது. விசை என்ற மரத்தைப் பற்றி யாதொரு குறிப்பும் தமிழிலக்கியத்தில் இல்லாததால் இதைக் கண்டுகொள்ள முடிவதில்லை. ஆயினும் இஃது ஒருவகை மூங்கிலாக இருக்கலாம் என்பது எனது கருத்தாகும். மூங்கில் மரத்தின் கிளைகளை வளைத்தால் அது விசையுடன் திரும்புவதால் விசை என்ற பெயர் வந்திருக்கலாம். ஞெமையும் நமையும் ஒரே மரத்தைத்தான் குறிப்பிட்டிருக்கின்றன. நமை என்ற பெயர் இன்றும் காடுகளில் இம் மரத்துக்கு வழங்குவதால் இந்த மரம் அறிவியற்படி எதுவென்று அறிந்துகொள்ள முடியும். இந்த மரத்தைப்பற்றிப் பல பாடல்கள் சங்கநூல்களில் வருகின்றன. இந்த மரம் நல்ல வைரமுடையது.

அதனுல் நாற்காலி முதலிய பொருட்களைச் செய்யப் பயன்படுகிறது. வெள்ளை நாகையென்றும் இதை அழைப்பர். இந்த மரம் இலையுதிர் காடுகளில் தொகுப்பாக வளர்ந்து காணப்படும். அறிவியலில் இந்த மரத்தை Anogeissus latifolia என்றழைத்தனர். ஆங்கிலத்தில் Axle wood என்றழைத்தனர்.

பனையும் அரையும் ஆவிரையும் :

''பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங் காலை அம்மொடு சிவணும்
ஐயென் இறுதி யரைவரைந்து கெடுமே
மெய்அவண் ஒழிய என்மனுர் புலவர் ''

என்று 284ஆம் சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது. சூத்திரம் 284 கூறும் பனைமரம் எல்லோருக்கும் தெரிந்தததொன்று. அதற்கு விளக்கம் தேவையில்லை. அரையென்ற மரமே மயக்கத்தைத் தரக் கூடும். இந்தப் பெயர் தமிழிலக்கியத்தில் ஒரே ஒரு பாடலில்தான் பயிலுகின்றது.

''வேனில் அரையத்து இலையொலி வெரீஇப்
போகில் புகா உண்ணுது பிறிதுபுலம் படரும்''

—ஐங்குறுநூறு 325

இந்த மரத்தின் இலைகள் வேனிற்காலத்தில் காற்று வீசினுல் மிகுந்த ஓசையை உண்டாக்கும் என்று கூறப்பட்டுள்ளது. அவ்வாறு ஓசை தரும் மரம் அரச மரமேயாகும். அரசமரம் என்ற பெயர் அரை என்ற சொல்லிலிருந்து வந்தது. அரசு என்று கொண்டு வட மொழிச் சொல் என்று மயங்கவேண்டா. மலையாளத்தில் இன்றும் அரையால் என்று நாட்டுமக்கள் வாயில் இந்தச் சங்கச்சொல் வழங்கு கிறது. பெரிய ஆலமரத்தைப் பெரியால் என்றும் அரசமரத்தை அரை யால் என்றும் இத்திமரத்தை இத்தியால் என்றும் மலையாளத்தில் வழங்குகின்றனர். கன்னடத்தில் அரளி என்றும் தெலுங்கில் ராய் என்றும் வரும் பெயர்களுக்கு அடிப்படை அரையென்ற சொல்லே யாகும். சங்கப்புலவர் கழாத்தலையார் என்பவர் இருங்கோவேளின் மூதாதையர் ஒருவரைச் சபித்ததனுல் நீடுநிலை அரையம் என்ற தலைநகரம் அழிந்ததாகக் கூறப்பட்டுள்ளது. நீடுநிலை அரையம் என்ற பெயர் மரத்தின் பெயரில் இருந்து தோன்றியுள்ளது என்று தெரிகின்றது. காஞ்சி வஞ்சி போன்ற ஊர்கள் மரப்பெயர்களால் பெயர் பெற்றது போல நீடுநிலை அரையம் என்ற பெயர் வந்திருக் கின்றது. அரையம் Ficus Religiosa என்றழைக்கப்படும்.

(தொடரும்)

———

# 1984 பொதுத் தேர்தல்

இந்திய மக்கள் தமக்குக் கிடைத்துள்ள வாக்குரிமையை எப்படிப் பயன்படுத்துவது என்று பெருமளவு புரிந்துகொண்டுவிட்டனர் என்பதை அண்மையில் நடைபெற்ற எட்டாவது பொதுத் தேர்தல் தெரிவித்துள்ளது. உலகிலேயே மிகப் பெரிய மக்களாட்சி நாடு நம் இந்தியத் திருநாடேயாகும். பல்வேறு மொழி பேசும் மக்களும் பல்வேறு சமயங்களைச் சார்ந்தவர்களும் இணைந்து வாழும் நாடு நம் நாடு. இவ்வாறு பல்வேறு வேற்றுமைகட்கிடையே ஒற்றுமையாக வாழும் நாடும் நம்முடைய நாடேயாம்.

நம் நாட்டு மக்கள் அரசியலில் தமக்கு வேண்டியவர்களை முழுவதும் போற்றவும் வேண்டாதவர்களை முழுவதும் ஒதுக்கவும் ஒரு முறை வேண்டியவர்கள் என்று தேர்ந்தெடுத்தவர்களையே மறுமுறை வேண்டாமென்று ஒதுக்கிவிடவும் தெரிந்துவைத்துள்ளனர்.

மூன்றில் இரண்டு பெரும்பான்மை வலிவுடன் 1971இல் இந்திரா அம்மையாரை அரியணை ஏற்றிய நம் மக்கள் 1977இல் அவரை வேண்டாமென்று ஒதுக்கிவிட்டு 1980இல் மறுமுறையும் அவரையே தேர்ந்தெடுத்தனர்.

அரசியல் கட்சிகள் தரும் விளக்கங்களில் மக்கள் கருத்தைச் செலுத்தவில்லை. தமக்கு வேண்டியவரைத் தேர்ந்தெடுக்கத் தெரிந்து கொண்டுவிட்டனர். அரசியலாளர் கைகளில் சிக்கியிருந்த மக்கள் மெல்ல நழுவித் தற்போது தம் கைகளில் அரசியலாளரைச் சிக்க வைக்கத் தெரிந்துள்ளனர். கடந்து பத்து ஆண்டுகளில் நடைபெற்ற தேர்தல்கள் இதனையே உணர்த்துகின்றன. கல்வியறிவும் பொது அறிவும் இன்னும் வளரவளரத் தாம் நினைப்பதுபோல் அரசியலாளரை ஆட்டிப்படைக்கும் ஆற்றலைக் கூடுதலாகவே பெற்றுவிடுவர். இஃது அரசியலாளர்களை நேர்மையுடனும் மக்களைப்பற்றிய ஒருவித அச்சத்துடனும் பணியாற்றத் துணை செய்யும். குடியாட்சி நல்ல முறையில் மலர்கிறது என்பதனையே இஃது உணர்த்துகிறது! வாழ்க குடியாட்சி அரசு!

நடந்து முடிந்த பொதுத் தேர்தலில் நாடளவில் மாண்புமிகு ராஜீவ் காந்தி தலைமையிலான இந்திரா காங்கிரசு 80 விழுக்காடு பெற்று அறுதிப் பெரும்பான்மை பெற்றுள்ளது. அவருடைய அன்னையார் இந்திரா அம்மையாரோ அல்லது அவருடைய தாத்தாவான ஜவகர்லால் நேருவோ சாதிக்கமுடியாததை ராஜீவ் காந்தி

சாதித்துள்ளார்; அவர் அந்தச் சாதனையைப் புரிய மக்கள் துணை நின்றுள்ளனர்.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் மாண்புமிகு புரட்சித் தலைவர் தமிழக முதல்வர் டாக்டர் ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் தலைமையிலான அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் தன் தோழமைக் கட்சியான இந்திரா காங்கிரசுடன் இணைந்து 84 விழுக்காட்டைப் பெற்றுப் பெரு வலிவு பெற்றுள்ளது.

இந்திரா அம்மையார் இல்லாது காங்கிரசுக் கட்சிக்குக் கிடைத்துள்ள பெருவெற்றி; அமெரிக்காவில் தமக்கேற்பட்ட கடுமையான நோயினின்று மீண்டு, உடல் நலமுற்றுவரும் மாண்புமிகு எம். ஜி. ஆர். அவர்கள் நேரடியாகத் தேர்தல் கூட்டத்தில் ஈடுபடாத நிலையில் இங்குள்ள அவர்தம் கட்சியினர் பெற்றுள்ள பெருவெற்றி: இவை இரண்டுமே இவ்விரு கட்சிகள்மீதும் மக்களுக்குள்ள பெருநம்பிக்கையைப் புலப்படுத்துகின்றது.

மாண்புமிகு எம். ஜி. ஆர். அவர்கள் தலைமையில் அமைந்த தமிழக அரசு தமிழ்நாட்டில் ஆற்றியுள்ள பல்வேறு நல்ல பணிகளை மக்கள் ஏற்றுக்கொண்டுள்ளனர் என்பதையும் தேர்தல் காட்டுகின்றது.

மக்கள் அரசாக மலர்ந்துள்ள இவ்விரு அரசுகளையும் பாராட்டி மக்களுக்கு மேலும் பல நன்மைகளை அவர்கள் ஆற்றுவார்கள் என்று நம்பி அவர்களைப் போற்றுகிறோம்.

———

## கானூரில் குடமுழுக்கு விழா

பசும்பொன் முத்துராமலிங்கனார் மாவட்டத்திலுள்ள கானூரில் எழுந்தருளியுள்ள சிவகாமி அம்பிகை உடனுறை ஸ்ரீ பிரளயவிடங்கேசுவரர் கோயில், அருள்மிகு அலர்மேல் மங்கை உடனுறை திரு வேங்கடப் பெருமாள் கோயில், எஸ். சிவசிதம்பரம் பிள்ளை அவர்களால் வெள்ளி விழாக்கண்ட அருள்மிகு பாலதண்டாயுதபாணி உடனுய அருள்மிகு தாண்டவ விநாயகர் திருக்கோயில் அருள்மிகு உத்தம மீனாட்சி திருக்கோயில் ஆகியவற்றில் 27—1—85 ஞாயிறு காலை 5 மணி முதல் 9 மணிவரை குடமுழுக்கு விழா நடைபெறும். அருள் நெறி அன்பர்களும் செல்வர்களும் குடமுழுக்கினைக் கண்டு திருவருள் பெறுவதோடு உயர்திரு சந்திரசேகரம் பிள்ளை, பொருளாளர், குடமுழுக்கு விழாக்குழு, கானூர் அஞ்சல் (623610) என்ற முகவரிக்கு நன்கொடைகள் அனுப்புமாறு கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்.

# செய்திகள்

## பல்லாவரத்தில் இருபெரும் விழா

மறைத்திரு. மறைமலையடிகளார் 108வது பிறந்த நாள் விழாவும் தமிழகத் தெய்வச் சேக்கிழார் மன்றத்தின் பெரியபுராணக் கருத்தரங்கும் 16—12—84 பிற்பகலில், பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றத்தில், பேராசிரியர் க. வடிவேலாயுதனார், எம். ஏ. அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. கழக ஆட்சியர் உயர்திரு. இரா. முத்துக்குமாரசுவாமி, எம். ஏ., பி. லிப்., அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்.

கீழ்க்காணும் அன்பர்கள் பல்வேறு தலைப்புகளில் உரையாற்றினர். அவை வருமாறு: செந்தமிழ்ச் செல்வமணி திரு. கோ. சண்முகம், பி. காம்., பெரியபுராணம்—திருமொழிச் சுவை; சித்தாந்த கவிமணி திரு. மு. பெ. சத்தியவேல் முருகன், பி. இ., பெரியபுராணம்—சைவசித்தாந்தம்; அமுதமொழியரசு எம். என். சங்கரநாராயணன் பெரியபுராணம்—சைவ சமய சாதனங்கள்; சண்டமாருத பிரசங்க ரத்னாகரம் ஆ. தி. அ. ஈசுவரனார், மறைமலையடிகளும்—பெரியபுராணமும்; சாத்திர பிரசார பூஷணம் ஆங்கீரச எஸ் வெங்கடேச சர்மா—பெரியபுராணத்தில் பசுவின் சிறப்பு; முதுபெரும் புலவர் இரா திருஞானசம்பந்தம்—பெரியபுராணம் இலக்கிய நோக்கு; பேராசிரியை மு. இரகுபாய். எம். ஏ., எம். எசி., பி. டி.—பெரியபுராணம் பெருங்காப்பியப் பெருங்கதை; இராமகதா இரத்தினா, புதுக்கோட்டை வி. தியாகராசன், பி. ஏ, பெரியபுராணம்—சீர்திருத்தம்; திரு. ஆ. தி. அ. ஈசுவரனார் நன்றியுரையுடன் விழா இனிது நிறைவுற்றது.

## தெய்விக சித்தாந்த இலக்கிய மன்றம்

இம் மன்றம் சைவ சமய சீலர் சிவபூஜா துரந்தரர் திரு. சிவ வேதாசலம் அவர்களுக்கு, அவர்தம் சைவ சமயத் தொண்டுகளைப் பாராட்டும் முகத்தான் 9—12—84இல் ''சைவ நெறிக் காவலர்'' என்னும் பட்டத்தினை வழங்கிப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தது. முதுபெரும் புலவர் கா. சி. தனக்கோடி, எம். ஏ. அவர்கள் தகுதியுரை வழங்கினார்.

## தெய்வப் பணி மகளிர் மன்றம்

இம் மன்றத்தின் 8 ஆம் ஆண்டு மார்கழிப் பெருவிழா நிகழ்ச்சிகள் 16—12—84 முதல் 13—1—85 வரை, நாடோறும் காலை 4-30 மணி முதல் 6 மணி வரை வீதி பாராயணமும் மாலை 5 மணி முதல் 7 மணி வரை அருளாளப் பெரு மக்களின் சொற்பொழிவுகளும் நடைபெற ஏற்பாடு செய்துள்ளது. திருமதி எஸ். பி. சற்குணம்,

பி. ஏ., தொடக்கவுரை நிகழ்த்தினர். திருமதிகள் பால சரோசா, கலைச்செல்வி தமிழரசன் ஆகியோர் வரவேற்புரை நிகழ்த்தினர். காசியம்மாள், அன்னிபெசன்ட் ஆகியோர் நன்றியுரை நவின்றனர்.

## பாவாணர் தமிழ்க் குடும்பம்—நெய்வேலி

நெய்வேலி பாவாணர் தமிழ்க் குடும்பத்தின் சார்பில் அருள்மணி நினைவுப் பரிசுப் போட்டிகள், பரிசளிப்பு, திருக்குறள் வகுப்பு எட்டாமாண்டு நிறைவு விழா ஆகியன 9—12—84இல் பா. த. கு. செயலர் தமிழ்த் திரு. தா அன்புவாணன் வெற்றிச் செல்வி தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. இறுதியில் பா த. கு. பொருளாளர் திரு. கோ. தங்கவேல்பட்டு நன்றி நவின்றார்.

## இஸ்லாமும் தமிழும்—சொற்பொழிவு

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் 17, 18 திசம்பர் 84 மாலையில் சென்னை மறைமலையடிகளார் நூலகத்தில் சென்னை உயர்நீதிமன்ற முன்னாள் தலைமை நீதிபதி திருமிகு மு. மு. இஸ்மாயில் அவர்கள் ஏ. வி. எம். ஜாபருத்தின் நூர்ஜகான் அறக்கட்டளைச் சொற்பொழிவாக 'இஸ்லாமும் தமிழும்' என்ற பொருள்பற்றி 'இனிக்கும் இராசநாயகம்' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினர்.

## புலவர் ந. இராமலிங்கம் பி. லிட். அவர்கள் மறைவு

திருவையாறு அரசர் தமிழ்க் கல்லூரி முதுநிலைப் பேராசிரியர் புலவர் ந. இராமலிங்கம் அவர்கள் 19—12—84 அன்று காலை இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். திரு புலவரவர்கள் குடந்தை சை. சி நூற்பதிப்புக் கழகத்தோடு தொடர்பு கொண்டு 12 ஆண்டுகளாக மாணவர்கட்கும் கல்லூரிக்கும் கழக நூல்களை வாங்கித் தந்து வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. மறைந்த புலவரவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் இதழ் கசுகூ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 00 |
| திருமுருக விசாக நம்பி அவர்கள் | 5 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 00 |
| கல்லை. தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 00 |
| தூத்துக்குடி திரு. ந. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் (ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை) | 20 00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20. | 50 00 |

———

# மதிப்புரை

## சமூக மறுமலர்ச்சியில் பெண்கள்

[ஆசிரியர்: எஸ். குலசேகரன், அமிழ்தம் பதிப்பகம், நார்த்தாம் பூண்டி, திருவண்ணுமலை (வ. ஆ) 606809, விலை: உரு. 9-00.]

பெண்கள் குழுகாயத்தில், அரசியலில், கல்வித் துறையில், சமயத்துறையில் குடும்ப வாழ்க்கையில் எப்படிப்பட்ட இன்னல்களைப் படுகின்றனர், அவர்தம் முன்னேற்றத்திற்கு வழி யாது என்பன போன்ற கருத்துகளையும், பெண்களைப்பற்றிய தம்முடைய புதுமை நினைவுகளையும் அன்னை தெரெசாவை அடிப்படையாக வைத்து இந் நூலினை உருவாக்கியுள்ளார் இந் நூலாசிரியர். பெண்கள் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள் நிரம்ப உள்ளன.

## சபரி தரிசனம்

[ஆசிரியர்: அருட்கவி, கு. செ. இராமசாமி. எம். ஏ., பழம்நீ பதிப்பகம், 86 வடக்கு மாசி வீதி, மதுரை-625001, விலை: உரு. 5-00.]

'சாமியே சரணம் ஐயப்பா!' என நாடோறும் மக்கள் போற்றி வணங்கும் தெய்வமான சபரிமலை ஐயப்பன்மீது பாடப்பெற்ற பாடல் களின் தொகுப்பே 'சபரி தரிசனம்' என்னும் இவ் வெளியீடு. ஐயப்பனை மட்டுமன்றிக் காஞ்சி காமகோடி பீடாதிபதிகளையும் அழகான பாடல்களால் போற்றுகிறார். பாடல்கள் சுவையான இசைப் பாடல்களாக அமைந்துள்ளன. நூலின் இறுதியில் "சபரி மலை யாத்திரை விதிமுறைகள்" என்ற தலைப்பில் காணப்படும் செய்திகள் அனைத்தும் ஐயப்பன் பக்தர்கள் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டியவை.

## அண்ணுவின் உவமைகள்

[தொகுத்தவர்கள்: திருவாளர்கள் அன்புப் பழம்நீ, கே. வி. வீர ராகவன், பி. ஏ., பி. எல்., அபிராமி பப்ளிகேஷன்ஸ், 307 இலிங்கி செட்டித் தெரு, சென்னை-1, விலை: உரு. 8-00.]

பேரறிஞர் அண்ணு அவர்கள் அவ்வப்போது பேசிய பேச்சுகளி லிருந்தும், திராவிடநாடு இதழ்களில் வெளிவந்த கருத்தோவியங் களிலிருந்தும் தொகுத்து வெளியிடப்பெற்ற அண்ணுவின் உவமைகள் எழுத்தாளர்கட்கும் பேச்சாளர்கட்கும் பயன்படக் கூடியவை. இந் நூல் முதன்முதல் 1949இல் வெளிவந்தது. இப்போது இரண்டாம் பதிப்பாக வெளி வந்திருக்கிறது. அண்ணுவின் கருத்துகள் பெரிதும் தேவைப்படும் காலம் இது. இப்படிப்பட்ட வேளையில் இளைஞர்கள்

இவ்வுவமைகளை ஒரு முறை படித்துவிட்டு இன்றைய அரசியலைக் காண்பது பயனுடையதாகும்.

## நிலாச் சோறு

[ஆசிரியர்: மழலைக் கவிஞர் பி. வி. கிரி, திருமலைப் பதிப்பகம், பிளாக் நெ. 385, அறிஞர் அண்ணு நகர் கிழக்கு, சென்னை-102, விலை: உரு. 6-00.]

கவிஞர் பி. வி. கிரி அவர்கள் இனிய எளிய நடையில் சிறுவர்கள் படித்துச் சுவையும் பயனும் காணும் வகையில் 62 பாடல்களை எழுதியுள்ளார். இவற்றுள் 'நிலாச் சோறு' என்னும் கவிதை ஓசை நயம் பொருட்செறிவு, யாப்பமைதி உள்ளதாக அமைந்துள்ளது. எனவேதான் இப் பாடல் நூலின் தலைப்பாயிற்றுப் போலும். பிற பாடல்கள் அனைத்தும் சிறுவர் உலகிற்கு வேண்டும் கருத்துக் கோவைகளாக உள்ளன. பதிப்பு முறையும் பாராட்டத்தக்க வகை யில் அமைந்துள்ளது.

## பாரதி பிள்ளைத் தமிழ்

[ஆசிரியர்: பழ. வெள்ளியங்கிரி, பச்சையம்மை பதிப்பகம், 79, காளத்தீஸ்வரன் கோயில் வீதி, புதுச்சேரி-1, விலை: உரு. 7-00.]

பாரதியார் நூற்ருண்டு விழாவினையொட்டி வெளிவந்த இந் நூல் பாரதியாரின் வரலாற்றைச் சுவைபட, பிள்ளைத் தமிழ் இலக்கணப் படி அமைத்திருப்பது இந் நூலாசிரியரின் தமிழ்க் கவிதையாற்றலை இனிது வெளிப்படுத்துகின்றது. கடவுள்மீது பாடவேண்டிய பிள்ளைத் தமிழை ஒரு கவிஞன்மீது பாடுகின்ற இவ்வாசிரியர், பாரதியார் மீண்டும் குழந்தையாகப் பிறக்க வேண்டும் என்று தான் விரும்பிய தாகவும், அதன் விளைவே இப் படைப்பு என்றும் கூறுகிருர். ஆசிரிய ரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## குழந்தைகள் நகைச்சுவை

[ஆசிரியர்: மு. சாயபு மரைக்காயர், எம். ஏ., பி. எசி., பாத்திமா பதிப்பகம், 67, காஜியார் வீதி, காரைக்கால், விலை: உரு. 2-00.]

புதுவை தாகூர் கலைக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக விருக்கும் இந் நூலாசிரியர், இனிய எளிய நடையில் சிறுவர்கள் படித்துச் சிரித்து மகிழும் வண்ணம் நகைச்சுவைகளைத் தொகுத்திருப் பது வியந்து பாராட்டத்தக்கது. நகைச்சுவை ஆற்றல் எல்லாருக் கும் கைவரும் ஆற்றலன்று. இந் நூலாசிரியர் அதனைப் பெற்றிருப்ப தோடு நகைச்சுவைகள் நாகரிகமாகவும் அமைந்திருக்கின்றன. நூல்

சிறியது தான்; எனினும் படிப்போரை வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கிறது.

## சிவத்தல மஞ்சரி

[ஆசிரியர்: ஆ. சிங்காரவேலன், தொகுப்பாசிரியர்; நெ. சி. தெய்வசிகாமணி, பைலட் பப்ளிகேஷன்ஸ், தபால் பெட்டி எண்: 1545, சென்னை-1, விலை: உரு. 7-50.]

சிவத்தலங்கள் எங்கெங்கே உள்ளன; அவற்றைப் பாடிய சமய குரவர் யார் யார், அத் தலங்களுக்கு அண்மையிலுள்ள தொடர் வண்டி நிலையங்கள், அங்கிருந்து எத்தனை கி. மீ. தொலைவில் இத் தலங்கள் உள்ளன என்ற விவரங்களை இந்நூலில் காணலாம். இந் நூலாசிரியர் கணக்குப்படி வடநாட்டில் 32 தலங்களும், தொண்டை நாட்டில் 32 தலங்களும், நடுநாட்டில் 22 தலங்களும், சோழநாட்டில் 63 தலங்களும், காவிரியின் தென்கரையில் 128 தலங்களும், பாண்டி நாட்டில் 15 தலங்களும், கொங்குநாட்டில் 7 தலங்களும், மலை நாட்டில் 2 தலங்களும், ஈழநாட்டில் 2 தலங்களும் உள்ளன என்பது தெரியவருகிறது.

வரப்பெற்றோம்:

## பெரியபுராணச் சரித்திர வெண்பாமாலை

[நூலாக்கம்: குமரபாரதி அடிகள், பதிப்பாசிரியர்: டாக்டர் சொ. சிங்காரவேலனார், எம். ஏ., பிஎச், டி., மயிலாடுதுறை.]

## தெய்வம் (கவிதைகள்)

பதிப்பாசிரியர்: டாக்டர் சொ. சிங்காரவேலன், மயிலாடுதுறை.]

இவ்விரண்டு நூல்களும் வெள்ளூர் கு. நமசிவாய மூர்த்தி— லால்குடி சி. அருண்மொழி ஆகியோரின் திருமண மலராக 21—8—84இல் வெளியிடப்பெற்றவை.

## வள்ளல், அமரர் சிவநெறிக் காவலர், சொ. சிவ சிதம்பரம் பிள்ளை அவர்கள் நினைவு மலர்

25ஆவது வெள்ளி விழா ஆண்டு 1984, சமய சன்மார்க்க சங்கம், கானூர், பசும்பொன் முத்து ராமலிங்கம் மாவட்டம்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.






அப்பர் அச்சகம், சென்னை - 600 108.